ஓம் பரப்பிரம்மணே நம :

64 பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆனந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ்.ஜி. இராமாநுஜலுநாயுடு

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.)

COPY RIGHT] [REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸஹு மாசிமீ 1௳ | இதழ்-83. |
| Vol. 7. | 1933-ம்ஹு பிப்ரவரிமீ 13௳ | No. 83. |




"உண்டாலன்றி பசி யடங்காது" அதுபோல் பகவானைப் பிரார்த்தித்தாலன்றி அவருடைய கருணையை அடைய முடியாது. உலகத்தில் வேலை செய்யாதவர்க்கு சோறிடமனம் வருமோ? அதுபோல் பக்தி செய்யும் உத்தமமான காரியத்தைச் செய்யாதவர்கட்கு பகவான் அனுக்கிரகம் செய்யமாட்டார். ஈசுவரனைக் கருணாநிதியென்று நாம் கூறினும், அவர் தமது கருணையை எற்கத் தக்கவர்களிடம் பாராட்டுவரேயன்றி தம்மை ஸ்மரிக்காத பாபிகளிடம் பாராட்டார். எவன் தன்னை வேறாகவும், ஈசுவரனை வேறாகவும் பிரித்துணரும் தன்மை யில்லாதவனோ, எவன் எங்கு கண்டாலும் ஈசுவர மயமாயிருக்கிறதென்னும் உண்மை ஞானத்தை யறிந்தனுஷ்டிப்பவனோ அவனே பிரமஞ்ஞானி. அவனே முக்தி யடைந்தவன். அத்தகைய மோக்ஷ ஸாம்பிராஜ்யமானது பகவத் பக்தியாலேயே கிடைக்கக்கூடிய தாகையால் அவருடைய சரண கமலங்களை எப்போதும் ஸ்மரிக்கக்கடவோம்.

ஃ

"வந்து வந்து என் மனத்திருந்த தேனே" என்றார் பெரியோர். எவன் ஈசுவரனைத் தியானிக்கிறானோ அவன் விபத்தில் அகப்படான். அவனைப் பாதிக்கவரும் அபாயங்கள் பகவத் கிருபையால் அதி சீக்கிரத்தில் விலகிப் போகும். இந்த நம்பிக்கையுள்ளவர்களின் வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை. மற்ற வாழ்வு தாழ்வேயாம். எந்தக் காரியத்துக்கும் பகவத் கிருபை யிருக்க வேண்டும். எவரும் பகவானை ஆரம்பத்தில் ஸ்மரித்தே தத்தம் காரியங்களைச் செய்யத் தொடங்குகின்றனர். ஈசுவர உபாஸனை யில்லாமல் எந்தக் காரிய

மும் முடிவு பெறாது. ஒரு வேளை முடிந்தாலும், அது முன் ஜன்மத்திற் செய்த நல்வினையின் பயனாலேயன்றி வேறில்லை. பகவானை பக்தர்கள் நானா விதமாய் பாவனை செய்து பூஜிக்கின்றனர். எவ்விதமாய்ப் பூஜை செய்தாலும் தயாநிதி எல்லோரையும் பரிபூரண கடாக்ஷத்தோடு ஆதரிக்கிறார். தீராச் சந்தேக முள்ளவன் ஸதா துக்கத்தையே அனுபவிப்பான் என்று 'பஞ்சதந் திர'த்திற் கூறியபடி கடவுளையும் அவருடைய கருணையையும்பற்றிச் சந்தே கிப்பவன் ஒருபோதும் சுக மடையான்.

ஃ

"ஸர்வ ஸங்க பரித்தியாகம்" என்பதென்ன? சுகம், துக்கம், பொறாமை முதலியவைகளால் பீடையுறாத ஜீவன்முக்தனாகிய சரீரிக்கு இன்ப துன்பங்களை நாசப்படுத்தி மறு ஜன்ம மில்லாமற்செய்யும் சுத்த வாஸ னைகள் ஸதா ஒட்டிக்கொண்டிருக்கும். அஞ்ஞானிகட்குக் கெட்ட வாஸனை களே ஆஸ்தியாம். இவ்வாஸனைகளுக்குத்தான் ஸங்கம் என்ற பெயர் கொடுத்திருக்கிறார்கள். சுகம் துக்கம் என்பவற்றைக் கவனியாமல், என்ன நேர்ந்தாலும் திருப்தியோடு ஏற்றுக்கொள்கிற மகானுபாவனே ஸர்வ ஸங்கப் பரித்யாகம் செய்தவன். எல்லாவற்றிலும் ஸமமான திருஷ்டிவைத்து; ஹிரு தயத்தில் ஸத்வ குணத்தை வகித்து, ஒன்றின்மீதும் அபிமானம் பாராட்டா மல் நிஷ்காம்யமான (பலனை அபேக்ஷியாத) கர்மங்களைச் செய்து வந்தால் பிரம்மாநந்தம் தானே யுண்டாகும்.

ஃ

"இவ்வுலகத்திற்குக் காரணம் ஸங்கம் தான்" ஸகல ஸம்பவங்களும் ஸங்கத்தினாலேயே நேரிடுகின்றன. ஸகல ஆசைகட்கும் அதுவே மூலம். இத்தகைய ஸங்கம் என்பது யாது? மனதை இழுக்கும் அல்லது சம்பந்தப் படுத்தும் காரணமே சங்கமாகும். மனதை ஒரு மேஜையின்மீது செலுத் தினால் மேஜையின் இருப்பு தோன்றும். அதாவது, மேஜை யென்ற ஸ்தூலப் பொருள் உண்டாகும். மனதை வேறிடத்தில் அலையவிட்டால் எதிரே நின்று பேசுவோன் எவ்வித நிந்தை செய்தாலும் தெரியாது. என்ன விபத்து உண்டானாலும் மனம் இல்லாதொழியின் பயம் தோன்றாது. அழகுள்ள பதார்த்தத்தில் மனம் செல்லாவிட்டால் அதன்மேல் ஆசை யுண்டாகாது. இந்த உலகத்திலேயே ஸகல சுகங்களும் துக்கங்களும் மனம் நாசமானால் நசித்து விடுமாதலின் உலகத்துக்குக் காரணமே மனமாயிற்று.

ஃ

"ஜன்ம புத்தி போகாது" மனிதர்களிற் சிலர் பிறர் வீட்டில் என்ன நடக்கிறதென்று வலிய நுழைந்து அறிவதில் சமர்த்தர்கள். வேறு சிலர் பொய்ச் சமாசாரங்களை ஒவ்வொருவரிடமும் சென்று புகன்று ஸந்தோஷிப் பர். பின்னும் சிலர் பிறருடைய ஜீவன ரகசியத்தை மெதுவாக அறிந்து கொள்ள நாடுவர். தெருத் தெருவாய் வீடு வீடாய் அலைந்து பிறர்மேல் தோஷம் கூறிப் பறை சாற்றுவது பெருமைக்குக் குறைவன்றோ? பிராணுந்த

சிலர் பிறரைப் பழிக்கிறார்கள். ஆனால், அவர்களைவிடத் தாங்கள் எவ்வ ளவோ கீழ்தரப்பட்ட நிலையிலுள்ளவர்களென்பதை மறந்துவிடுகிறார்கள்.

காலத்தில். ஐயோ! ஒரு நிமிஷ நேரந்தானே யிருக்கிறது; செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளவில்லையே; நாராயண நாராயணவென்றுவது சொல்வோம். பற்கள் கிட்டிப் பேச்சடங்கினாலும் யாரேனும் நாராயண ஸ்மரணை செய்யட்டும்; அதைக் காதினால் கேட்போம் என்று அவசரப்படுகிற மாந்தர், ஸாவகாசமான வேளைகளிலெல்லாம் வேண்டியமட்டும் பகவத் பக்தி செய்யாமல் அந்யர்களை அவதூறு செய்து காலங் கழிப்பானேன்? இது ஜென்மாந்திரத்திற் செய்த மகத்தான பாபத்தின் பயனேயன்றி வேறில்லை. வைக்கோற் போரை யடுக்குவது பிரயாஸம். அதைத் தீ வைத்து எரிப்பது எளிது. ஒரு உயிரைப் பலவித மருந்து மூலிகைகளால் காப்பாற்றுவது ஸாமர்த்தியமேயன்றி, விஷத்தைக் கொடுத்து அழிப்பது ஸாமர்த்தியமல்ல. ஐயோ! கெட்ட சித்தமுடைய மனுஷ்யர்கள் பிறருக்குத் துன்பம் விளைவிப்பதையே தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். இவர்கட்கு எப்போது பகவான் சற்புத்தியைக் கற்பிப்பாரோ தெரியவில்லை.

ஃ

"கர்ம யோகத்தின் தன்மை" பல காரியங்கள் அநேக சிறு காரியங்களின் தொகுதி. நாம் ஸமுத்திரக் கரையில் நின்றால் அலைகளின் சப்தத்தைக் கேட்கிறோம். ஆகிலும், அவ்வலைகள் ஒவ்வொன்றாக ஒலிக்கும் ஓசையை நாம் கேட்க முடியுமா? இம்மாதிரியாக, ஒவ்வொரு கர்மத்தின் அடையாளத்தையும் நாம் காண்பதரிது. ஆனால், அவைகளின் தொகுதியைக் காணலாம். ஒரு மனுஷ்யனுடைய உண்மையான குணத்தை யறிய வேண்டுமானால், அவனுடைய சாதாரண செயல்களைக் கவனிக்கவேண்டும். கர்மத்தினாலேதான் குணம் ஏற்படுகிறதென்பதை நாம் மறக்கலாகாது. உலகத்திலுள்ள ஸகல சக்திகளையும் மனுஷ்யன் அடைந்து உபயோகப்படுத்துகிறான். அந்த உபயோகம் நல்வழியி லிருக்கவேண்டும். நாம் இன்னது அனுபவிக்கலா மென்பதை நம்முடைய கர்மம் நிர்ணயிக்கிறது. இன்று இருக்கும் நிலைமைக்கும் நாமே காரணம். அடுத்த ஜென்மத்தில் நாம் எப்படி ஆகவேண்டுமென்று எண்ணுகிறோமோ அப்படியாவதற்கு நம்மால் முடியும். இப்போதுள்ள நிலைமை பூர்வ ஜன்ம வினையால் உண்டானதென்றால், வரப்போகிற ஜென்மத்தின் நிலைமை இந்த ஜென்மத்தின் கர்மத்தினாலுண்டாகுமென்பதில் தடையென்ன? ஸகல கர்மங்களும் மனோ சக்தியை விர்த்தி செய்து அதன் மூலமாக ஆத்மாவைக் காணும்படியா யிருக்கவேண்டும். ஜனக மகாராஜன் ஸகல ஸம்பத்துகளுடன் ராஜ்யபாரம் செய்தாலும், அவைகளிற் கிஞ்சிற்றேனும் சிந்தை வைக்காமல் பகவானிடமே பக்தி செய்தார். மௌன யோகிகள் பார்வைக்கு சும்மா விருந்தாலும் ஒரு நிமிஷங்கூட வியர்த்த மாக்காமல் ஈசுவரத்தியானம் செய்கின்றனர். இதுதான் கர்ம யோகத்தின் தன்மை. ஆரம்பத்தில் ஒரு கருத்தை யுத்தேசித்துக் கர்மங்களைச் செய்யவேண்டும். கருத்தின்றிக் காரியமுண்டாகாது. சிலருக்குப் பிரக்யாதி யடைவதில் கருத்து. சிலருக்குப் பணம் சம்பாதிக்க ஆசை. சிலருக்கு அதிகாரத்தில் ஆவல். சிலருக்கு சொர்க்கத்தில் விருப்பம். இப்படி

---

சத்தியத்தையும் அஹிம்ஸையையும் அடிப்படையாகக் கொண்டதொரு இயக்கம் எந்தக் காலத்திலும் தவறிவிடாது. இந்த இயக்கம் தவறினால் மற்றெந்த இயக்கமும் வெற்றியடைய முடியாது.—ஸ்ரீ கேலப்பன்.

அதது கிடைக்கவேண்டுமென்ற கருத்தோடு கர்மம் செய்கிறார்கள். இவ்விதம் கர்மங்களைச் செய்துவந்து, பிறகு நாளடைவில் சுய நன்மையைப் போக்கி பலனை விரும்பாமல் கர்மங்களைச் செய்தோமானால், கடைசியில் பகவானுடைய கருணையால் ஞானத்தை யடைவோம்.

ஃ

"அவசரப் படேல்" அவசரப் பட்டால் எந்தக் காரியமும் ஆகாது. சரீரத்தில் சொரி சிரங்குக ளுண்டானால், அவற்றைப் புண்படுத்துவது அறிவீனம். சிலர் சிரங்கு பழுத்து சீ வடிந்து ஆறுமுன் தோலை யுரிப்பர். இதனால் நோய் அதிகரித்துப் புதிய சிரங்குகள் புறப்பட்டு அவதியடைவர். இதுபோல், கிருகஸ்தாசிரமத்திலேயே யிருந்து ஈசுவரனைத் தியானித்து ஸத்கருமங்களைச் செய்துவரின் நாளடைவில் உலகப்பற்று ஒழியும். அப்போது ஸந்யாஸி யாகலாம். சிலர் அப்படிச் செய்யாமல் குடும்பத்தாரோடு சண்டை போட்டும், சோம்பலை மேற்கொண்டும், கோபத்தினாலும் துறவிகளாகின்றனர். இதனால், முன்னிலும் அதிகமான துன்பமே அனுபவிக்க நேருகிறது. நல்ல மருந்தைப்போட்டுக் காயத்தை யாற்றுவதுபோல். ஸத்குருவைத் தேடி ஸம்சயங்களை நிவர்த்தி செய்து கொள்வது விவேகிகளின் இயல்பு.

ஃ

"தாய்—தாதி—சேய்" தாய் அன்னமிடுவதற்காகத் தன் குழந்தையை அழைத்து வரும்படி தாதிக்குக் கூறுகிறாள். அவ்விதமே தாதி சென்று அழைக்க, குழந்தை தன் விளையாட்டில் கவனமாய்த் தனக்குப் பசியில்லையென்று கூறி வரேன் என்று மறுக்கிறான். தாய் கூப்பிட்டால் உடனே வரவேண்டாமா என்று தாதி புத்தி கூறுகிறாள். அதற்குக் குழந்தை. உன் உபதேசம் வேண்டாம், நான் வரமாட்டேன் என்கிறான். பிறகு தாதி தாயிடம் சென்று தான் அழைத்தும் குழந்தை வராததைத் தெரிவிக்கிறாள். அதற்குத் தாய், அவன் சிறு குழந்தை, விளையாட்டு தீர்ந்தால் பசியுண்டாகி ஓடி வருவான் என்கிறாள். பிறகு குழந்தைக்குப் பசியுண்டாகித் தாதியிடம் சென்று அன்ன மிடுமாறு தன் மாதாவுக்குத் தெரிவிக்கும்படி வேண்டுகிறான். தாதி உடனே தாயிடம் சென்று, அம்மா குழந்தை ஓடி வந்தான், பசி யுண்டாயிற்றாம் என்கிறாள். அதற்குத் தாய் அவனை அழைத்து வரும்படி புகன்று, அவன் வந்ததும், கண்மணி! இதோ அன்னம் படைக்கிறேன், புசித்துப் பசியாறு என்கிறாள். இந்த ஸம்பாஷணையில் தாய் என்பது ஜெகன் மாதாவான பரமேசுவரியையும், தாதி என்பது மனசாக்ஷியையும், சேய் அதாவது குழந்தை என்பது ஜீவனையும், விளையாடிக் கொண்டிருப்பது உலக சுகங்களை யனுபவித்தலையும், பசியுண்டாவது ஜெனன மரண துக்க ஞாபகத்தையும் குறிக்கின்றன. மனிதர்கள் அற்பசுகங்களில் அழுந்திக்கிடக்கும்போது மரணம் என்னும் ஸ்மரணையின்றி, விழிப்பின்றி. தெய்வத்தை மறந்து, மனஸ்ஸாக்ஷி கூறும் புத்திமதியை அவமதித்து மயங்கிக் கிடக்கிறார்கள். மரணம்

---

உலகத்திலுள்ள ஒவ்வொரு காரியத்துக்கும் இடையிடையே சிற்சில தடைகளேற்பட்டுத் தாமத முண்டாவது வழக்கந்தான். இப்படிப்பட்ட விக்நங்கள் நேரிடாதபடி ஈசுவரனைப் பிரார்த்தித்துக்கொண்டே யிருக்கவேண்டும். 'அவன்' அருளின்றி அணுவும் அசையாது.

நிச்சயமாகவே வருங்காலத்தில் நாராயண நாராயண சிவசிவா வென்று ஸ்மரிக்கிறார்கள். அப்போது அவர்களைத் தள்ளி விடாமல் தயாநிதியான ஈசன் தாயைப்போல் இரக்ஷிப்பதால் அவருடைய கருணை யாருக்கு வரும்?. ஆதலின், ஸதா பகவானை ஸ்தோத்திரம் செய்யக்கடவோம்.

---

## புது வருட சந்தா.

இன்பமோடும் ஏழாக இசைவருடம்
சென்றதிதோ; எட்டெனச் சொல்
நன்மையுறு பருவமதோ நாம் மகிழச்
சித்திரையில் நணி தொடங்கும்.
அன்பரெலாம் புதுவருடமதன் சந்தாதனை
விரைவில் அனுப்பி வைத்தே
பொன்மொழி சொல் "அமிர்தினி"யாள்
புகலரிய மகிழ்ச்சியுறப் புரிகுவீரே!

ஃ

பெருந்தொல்லை—"வீ. பி.யில் பெற்றிடலாம்"
என இருத்தல்; பேசு சந்தா
தருமன்பர் "மணியார்டர்" தனிலனுப்பின்
கால்ரூபாய் தானும் மீதி;
அருமைமிகும் நேயர்காள்; அனைவீரும்
சந்தாவை அன்பு கூர்ந்து
கருணையோடும் விரைந்தனுப்பிக் கண்மணிநம்
"அமிர்தினி"யைக் களிக்கச் செய்வீர்.

ஆரியூர்—வ. பதுமநாப பிள்ளை

---

பிழை திருத்தம்:—சென்ற தை மாத வஞ்சிகையின் 625-ம் பக்கத்திலுள்ள 'மதிப்புரை'யில் "ஜெயசங்கரன்" என்றிருப்பதை "ஜெயரங்கன்" என்று திருத்தி வாசித்துக்கொள்ளவும். இந்த நாவல் ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்கராஜு அவர்களால் இயற்றப்பட்டதாகும். விலை ரூ. 1-8-0. நமது ஆபீஸில் கிடைக்கும்.

---

எந்தக் காரியத்திலும் நம் இஷ்டப்படி சென்று. இடறி நடந்து, பழிஇனுவொழிய நாம் உன்னத ஸ்திதிக்கு வந்து நிலைபெற முடியாது. புசிப்பதோடு நிற்கக்கூடாது. புசித்ததைத் தானே சமைத்து ஆக்கவும் வழி தெரிய வேண்டும்.

அமிர்தகுணபோதினி

ஆங்கீரஸஹு மாசிமூ 1வ

# மகாமகம்.

ஆவலுடனும் எதிர்நோக்கிய "மகாமகம்" இந்த மாசிமாதக் கடைசியில் 27-ம் தேதி வெள்ளிக் கிழமையின்று வருகின்றது. அன்று கும்பகோணத்தில் "மகாமகம்" மிகவும் சிறப்பாக நடைபெறும். ஹிந்துக்களுக்கு இது மிகவும் புண்ணியமான நாள். இந்த நன்னளில் அமுதவாவியாகிய "மகாமக" தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வோர் ஸகல பிணிகளினின்றும் நீங்கி, ஸமஸ்த பாவங்களும் விலகப்பெற்றவர்களாய் மோக்ஷமடைவார்களென ஆதி புராணங்களில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கிறது. இந்த மஹோத்ஸவத்திற்காக லக்ஷக்கணக்கான பக்தர்கள் கும்பகோணத்தில் கூடுவார்கள். ஜனத்திரள் மேன்மேலும் அதிகப்பட்டுக்கொண்டே வரும். சென்ற "மகாமக"த்திற்கும் இந்த "மகாமக"த்திற்கும் இடையில் எவ்வளவோ மாறுதல்கள் நேர்ந்துள்ளன. இனி பன்னிரு ஆண்டுகட்குப் பின் வரும் "மகாமக"த்தின்போது என்னென்ன புதுத் தோற்றங்களுடன் இவ்வுலகு விளங்குமோ! இப்போதுள்ளவர்கள் அப்பொழுது இருக்கின்றனரோ யாதோ! நமது இப்போதைய ஜீவியத்தில், நாம் பிறந்து வளர்ந்த தென்னிந்திய பூமியில் நடைபெறும் இந்த மகோத்ஸவத்திற்கு நாமனைவரும் சென்று ஆநந்தபரிதர்களாகக் கடவோம்.

ஃ

"மகாமக"த்தின் வரலாற்றினை இங்கு சுருக்கித் தருகிறோம். பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை தேவகுருவாகிய பிரகஸ்பதி சிம்ம இராசியில் ஸஞ்சரிக்கும் காலத்தில் சூரியன் கும்பராசியில் நிற்க, சந்திரன் குருவுடன் சேர்வதாகிய மாசிமாதம் பௌர்ணமி திதியே "மகாமக" நாளாகும். உலகமெல்லாம் அழிந்துவிடக் கூடிய பிரளயம் வருமென்பதைப் பிரமதேவர் அறிந்து, பழயபடியும்

நாம் எத்தனை உயர்வாகப் பரீக்ஷை தேறியபோதிலும், பிறர் உத்தரவுக்குக் காத்திருப்பதாகிய, ஊரின் வழக்கத்தை நம்மால் விட முடியவில்லை.

உலகத்தை சிருஷ்டிப்பதற்கு வழி எதுவென யோசித்துச் சிவபெருமானிடம் தெரிவிக்க, உமாபதி நான்முகனை நோக்கிப் பின்வருமாறு கூறினர்:—"அமிர்தமிட்டுப் பிசைந்த இந்த மண்ணால் ஒரு கலசம் செய்து, கலசத்துள் அமுதமூற்றி, மண்சேர்த்துச் சிருஷ்டி பீஜத்தைப் புதைத்துச் சுற்றிலும் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலியவற்றை வைத்துப் பின்னும் அமிர்தமூற்றி மகாமேருவின் தென்பால் ஓரிடத்தில் ஓர் உறியின்மீது வைத்துவிடும். இவ்வுறி பிரளயத்தி லழியாது பின் உலகமுண்டாவதற்குக் காரணமாகும்" என்று அருளிச்செய்தார்.

ஃ

இது கேட்ட பிரமதேவர் அவ்விதமே செய்து கும்பத்துக்கு நூல், மாவிலை, தேங்காய், பூணூல், தருப்பை முதலியன இட்டு வில்வம் சந்தனம் ஆதியவற்றால் பூஜைசெய்து உறியில் தூக்கிவைத்தார். பின்னர் பிரளயமுண்டானபோது, தண்ணீரில் மிதந்து இக்கலசம் தென்றிசை நோக்கிச் செல்ல வாரம்பித்தது. இவ்விதம் வெகுதூரம் சென்று தருப்பையும் மாவிலையும் ஓரிடத்தில் விழ, அவ்விடம் சமிவனமும், அங்கு முளைத்த லிங்கம் தருப்பை லிங்கமுமாயின. இந்த லிங்கத்தைச் சப்த கன்னியர்களும் ஜலரூபியாய்ச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள். கலசத்தைச் சேர்ந்த உறியும், தேங்காயும், பூணூலும் விழுந்த இடங்களில் சிக்கேச (சிக்கம்—உறி)ரும், நாரிகேளேச (நாரிகேளம்—தேங்காய்)ரும், யக்ஞோப வீதரும் (யக்ஞோபவீதம்—பூணூல்) தோன்றினார்கள். பிற்பாடு, சிவபெருமானே இக்கலசத்தைப் பார்க்கும்படியாக வேடரூபங்கொண்டு திருவிடைமருதூர்த்தலத்திற்குக் கீழ்ப்பக்கத்தில் நின்று மேற்றிசையில் கும்பம் தெரிவதைப் பார்த்து ஓர் அம்பு எய்யவே, அந்த அம்பு சென்று கலசத்தின் மூக்கையுஸடத்துக் கடத்தையும் கவிழ்த்தது. மூக்கு உடைந்து விழுந்த இடம் குடவாயிலாயிற்று. சிவபெருமான் நின்று பாணம் எய்த இடம் பாணபுரியாயிற்று. கடத்திலிருந்து வெளிப்பட்ட அமிர்தம் இரண்டு வாவிகளாகிப் பொற்றாமரைத் தீர்த்தமும், மகாமக தீர்த்தமு முண்டாயின.

ஃ

சிவபெருமான் கடத்தைச் சமீபித்துச் சென்று, அமிர்தத்தால் நனைந்த மண்ணைப் பிசைந்தெடுத்து ஓர் இலிங்கமாக்கி, உடைந்த குடமூக்கில் வைத்துப் பூஜைசெய்து, பிரமாதி தேவர்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அந்த லிங்கத்துட்

---

இரண்டு குடும்பத்தார்கள் மனஸ்தாபப்படுகையில், அங்கு நெருங்குகிற மூன்றாவது மனிதன் அந்த மனஸ்தாப சச்சரவைத் தனக்கு அனுகூலமாக உபயோகித்துக்கொண்டு லாபமடைகிறான்.

சென்று மறைந்து அமிர்தலிங்கேசராயினர். உலகத்துக்கெல்லாம் மங்களம் வந்ததெனத் தேவர்கள் ஆநந்தித்து உமாதேவியை அந்த லிங்கத்திற்கு இடப்பாகத்தில் எழுந்தருளச்செய்து அம்பிகையை மங்கள நாயகியென அழைத்துத் துதித்தனர். இவையெல்லாம் நடந்த மாதமான மாசி மாதத்தில் பிரமதேவர் ஆதிகும்பேசருக்கும் மங்கள நாயகிக்கும் ஆலயம் சமைப்பித்து ஒன்பது நாள் உத்ஸவம் கொண்டாடிப் பத்தாம் நாள் அமிர்த வாவியுள் நீராடி "மகாமக" தீர்த்தத்தில் ஸ்வாமியைத் தீர்த்தம் கொடுக்கச்செய்தார். குடமுக்கின் வழியாய் அமிர்தம் பரவியதால் இந்த ஸ்தலத்திற்குக் "கும்பகோணம்" எனப் பெயராயிற்று. இதற்கு வேறு காரணங்களும் விஸ்தாரமாய்ப் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஃ

கும்பகோணத்தைச் சுற்றித் திருவிடைமருதூர், திருநாகேசுவரம், ருத்திராக்ஷவனம், சுவாமிமலை, பாடலவனம் என்ற பஞ்ச க்ஷேத்திரங்க ளிருக்கின்றன. அமுதவாவியாகிய மக தீர்த்தத்துக் கருகில் பிரம தீர்த்தம் ஒன்றுண்டு. திக்குப் பாலகர் எண்மர் பேராலும், நதி கன்னியர் ஒன்பதின்மர் பேராலும் தீர்த்தங்கள் ஏற்பட்டன. தேவராதியர் தீர்த்தம் அறுபத்தாறுகோடி ஏற்பட்டிருக்கிறது. இந்தப் புண்ணிய நாளில் கங்கை முதலிய தீர்த்த கன்னியர்களும், பிரமன் முதலிய தேவர்களும் மகா தீர்த்தத்திலும், மகா தேவாலயத்திலும் வசிப்பார்கள். ஆகையினாலே, இத்தீர்த்தத்தின் மஹிமையையும்—பெருமையையும், ஸ்தலத்தின் அருமையையும் ஹிந்துக்கள் வெகுவாய்க் கொண்டாடுகிறார்கள். மற்றும் விஷயங்கள் புராணங்களில் மிகவும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. இந்த மாசி மாதம் 27-ம் தேதியாகிய வெள்ளிக்கிழமை மிகவும் புண்ணிய நாள் எனக் கருதப்பட்டு, பக்தகோடிகள் ஸகல பாப விமோசனமும், எல்லாக் காரிய சித்தியும் எய்தும்பொருட்டுப் பெரிய க்ஷேத்திரமாகிய கும்பகோணத்திற்குப் போய்ச்சேர்ந்து அமிர்தலிங்கேச்வரருடைய தரிசனத்திற்குத் திரண்டுகொண்டிருக்கிறார்கள். ஹிந்துக்களுடைய பக்திக்கும் ஸாத்விக குணத்திற்கும் இந்த "மகாமக" உத்ஸவம் ஒரு பெரிய திருஷ்டாந்தமாகும். "மகாமக" தரிசன விசேஷத்தால் நாம் இம்மை மறுமைப் பயன்களேயும் அடையக்கடவோம். நமது வாணுள் முற்றிலும் ஆஸ்திகர்களாகவே இருந்து, நமது மத கிரந்தங்களில் விசுவாசமும் பக்தியும் கொண்டு ஈசுவரத் தியானத்துடன் விளங்கக்கடவோம். நமது முன்னோர்கள் நடந்து சென்று காட்டிய

---

நாங்கள் சம்மதித்தாலும், பிராமணரல்லாதார் தீண்டாதாரின் பிரவேசத்துக்கு இணங்கார்கள் என்று சில வைதிகர்கள் கூறுவது வெகு விநோதம். இந்தவைதிகர்கள் பிராமணரல்லாதாரையும் சூத்திரரென மிதித்து அவமதித்துக் கேவலப்படுத்திவருவதைப் பிராமணரல்லாதார் மறந்துவிடவில்லை.

வழிதான், நாம் பக்தியுடன் பின்பற்றத்தக்க நல்வழியாகும். "மகா மகம்" நன்கு நிறைவேறுக. பாரத மாதா வாழ்க.

குடந்தை யெனுந் திருநகரில் கூறு "மகாமகம்"
காணக் கூடுவாரில்
உடன் கலந்து களித்திடவே உமது மக்கள்
மனைவியோடும் உவந்துசென்று
"நடந்த மகாமகந் தனக்கு நாமும் சென்றோம்"
என்றுநாளும் இன்பம்
அடைந்து சோலி மகிழ்ந்திடவே ஆர்வமோடும்
புறப்படுவீர் அன்புகொண்டே.

## கட்டுப்படமட்டுமே கற்றிருத்தல்.



மஹாபாரதத்தில், அபிமந்யு பகைவரின் கூட்டத்திற்குள் நுழையக் கற்று, மீளுவதைக் கற்காமல் மாண்டது போலே, நாமும் பிறவிமுதல் கட்டுப்படக் கற்று, அவிழ்க்கக் கற்காமல், நமக்கு நேரிடும் ஸகல விபரீதங்களுக்கும் தலை குனிகிறோம்.

மனிதருக்கும், நூல்களுக்கும், சைகைகளுக்கும் எல்லைகளுக்கும், கற்பனைத் தடைகளுக்கும் தலைகுனிந்து பல தலைமுறையாய் வழக்கமாய் விட்டபடியால், எந்தத் துறையிலும் நாமாக ஒன்று செய்ய முடியும் என்கிற உண்மை நம் முகத்தின் முன்னே நின்றாலும், கண்ணுக்குத் தெரியாமல் போகிறது. ஐரோப்பிய மூக்குக்கண்ணாடி போட்டுக்கொண்டாலும் நமக்குத் தெளிவு உண்டாகவில்லை.

தெய்வத்தின் பெயர் சொல்லி மனிதனை மனிதன் கீழ்ப்படுத்தி அவமதிக்கும்படி செய்து விட்டார்கள். இப்படிப்பட்ட தேசம் அடிமைகளைச் செய்வதற்கு நல்ல தொழிற் சாலையாயிற்று

அறியாமையால் கட்டும், அறிவினால் விடுதலையும் கைகூடும் என்பதை முன்னோர் அறிவார். பொய் என்பது எது? தன்னை ஸர்வத்திலிருந்து பிரிவாகக் காணுதல்; உலகமும் தானும் ஒன்றெனக் காண்பதே உண்மை யறிவு.

—ஸர். ரவீந்திரநாத் தாகூர்.

## நமது சந்தாதாரர்களுக்கு
# விசேஷ விஞ்ஞாபனம்.





ஸர்வேச்வரனது அருளால், ஸர்வ மத சம்மதமாய், ஸகல ஜன மனோகரமாய் சென்ற ஏழாண்டுகளாக நடைபெற்றுவரும் "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையைத் தாங்களெல்லோரும் ஆதரித்து அபிமானிப்பதற்காக உகந்த வந்தனமளித்து மிகுந்த நன்றி பாராட்டுகின்றோம.

ஃ

நமது செந்தமிழ் நாட்டில் "அமிர்த குணபோதினி" தோன்றிய காலமுதற் கொண்டு, தமிழ்ச் செல்வர்கள் ஒரு புதிய உத்ஸாகத்துடனும் அதனைப் பிரதிதடவைகள் தோறும் வரவேற்று மகிழ்கின்றார்கள். உலக நடவடிக்கைகளையும், ஆழ்ந்த ரகசியங்களையும், அனுபவஞானங்களையும் ஒருசேரத்திரட்டிக் கொடுத்திருப்பதை ஆவலோடும் வாசிக்கின்றார்கள். இப்பத்திரிகையின் ருசிகரத்தையும், இதைப் படிப்பதிலுள்ள மகத்தான ஆநந்தத்தையும், இப்பத்திரிகை யொன்றில் மட்டுமே தான் காணக்கூடுமென்று சொல்லும்படி அத்தனை ஸமத்காரமாய் அது வரையப்படுவதை நோக்கி இன்புறுகின்றார்கள். உலகின் எந்தவிதமான அனுபவங்களையும் "அமிர்த குணபோதினி" யில் காணலாமென்கின்றார்கள். இவ்வாறாகக் கொண்டாடிப் பூரித்து மனோல்லாஸமெய்தும் நமது அன்பிற்கினிய நேயர்கள் இனி பிறக்கப்போகும் எட்டாவது வருடத்திலும் முன்னையினும் அதிக உத்ஸாகமாக "அமிர்த குணபோதினி" யை ஆதரித்து அபிவிருத்தி செய்வார்களென்று நம்புகின்றேம்.

ஃ

"அமிர்த குணபோதினி"யின் புகழ் தமிழ் நாடெங்கணும் பரவியுள்ளது. வெளி நாடுகளிலும் அதன் கீர்த்தி வியாபித்திருக்கின்றது. காலம் தவறாமல் குறித்த தேதியில் பிரகடனமாகின்றது. ஒவ்வொரு விஷயமும் அதிக கவனமாய் ஆராய்ந்து வரையப்படுகின்றது. பத்திரிகையின் பெயருக்கேற்றபடி வெகு அருமையான நல்விஷயங்கள் நிறைந்து, யாவும் அமிர்த குண போதகமாய் ஜ்வலித்து, அவற்றைப் படிக்குந்தோறும் மனோஸாந்தியைக் கொடுத்து திவ்யஞானத்தை விருத்தி செய்கின்றது. அழுக்கடைந்த கண்ணாடியில் பிரதிபிம்பம் தோன்றாது. ஆதலின், அவ்வழுக்கை நீக்கிக் கண்ணாடி

---

> உண்மையான வைதிகமுடைய பெரியோர்கள், பரமனின் அடியார்களாக அனைவரையும் ஏற்றுக்கொள்வரேயன்றி, உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பேதபுத்தி படைத்து எவரையும் ஒதுக்கித் தள்ளமாட்டார்கள்.

யைச் சுத்தம் செய்வதுபோல், அக்ஞானத்தால் மறைக்கப்பட்ட யதார்த்தத்தை "அமிர்த குணபோதினி" நன்ருய் எடுத்துக் காட்டி ஹிதோபதேசம் புரிந்து மனோத்ஸாகத்தை உண்டாக்குகின்றது. பத்திரிகையைத் திறந்ததும் முதல் பக்கத்தில் பகவத் பக்தி விஷயங்களும், ஞானவிஷயங்களும் காணப்படுவது நமது "அமிர்த குணபோதினி" ஒன்றில் மட்டுமேதான். மேலும், அது நானு விதமான சுவைகளுடனும் பரிமளிக்கின்றது. பகவத் குணுமிர்தங்களை விவரிக்கும் பத்திரிகையாயும், அனுபவஞானங்களை விளக்கிக் கூறும் பத்திரிகையாயும், ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் வியாசங்களை வரையும் பத்திரிகையாயும், முதல்தரமான கௌரவ விகடப் பத்திரிகையாயும் இன்னும் பலவித ரூபங்களுடனும் விளங்கி உன்னதம் கொண்டுள்ளது.

ஃ

இப்பத்திரிகையை ஸ்தாபித்த இதன் ஆசிரியர் பத்திராசிரிய நிர்வாகத்தில் சென்ற முப்பது வருடங்களாக உழைத்து வந்திருக்கின்ருர். "அமிர்த குணபோதினி"யை ஒரு முதல்தரமான பத்திரிகையாக்க வேண்டுமென்று சென்ற எழு வருடங்களாக எத்துணையோ பிரயாஸைப்பட்டிருக்கின்ருர். இரவு பகல் கண்விழித்து எவ்வளவோ உழைத்திருக்கின்ருர். "அமிர்த குணபோதினி"யைத் தமது உயிரினும் சிறந்ததாக நினைத்து, தமது காலத்தை முழுதும் அதற்கே செலவிட்டிருக்கின்ருர். அவரது அரிய முயற்சியை அபிமானித்து எட்டாவது வருடத்திலும் "அமிர்த குணபோதினி"யை ஆதரிக்க முன்வந்து, அதன் புது வருடசந்தாவை இப்பத்திரிகையைப் பெற்றதும் மணியார்டர் செய்யுமாறு வேண்டுகின்றேம். வி. பீ. யில் பத்திரிகையைப் பெற விரும்புவதில், பல கஷ்ட நஷ்டங்கள் இருக்கின்றன. ஆதலின், மணியார்டரில் புது வருஷசந்தாவை யனுப்பிவைப்பது மகோபகாரமாகும். முன்னதாகவே, புதுவருட சந்தாவை உபகரிப்பது காலத்தில் பெய்த மழை போலுமாகும்.

ஃ

பிரபல தனவந்தரான ஸ்ரீமானின் கையில் "அமிர்த குணபோதினி" ஒப்புவிக்கப்பட்டிருப்பதால், முன்னிலும் அது விசேஷித்த பலத்தையும் திறமையான நிர்வாகத்தையும் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது. வெளிநாடுகளிலுள்ள நமது அன்பிற்கினிய சந்தாதாரர்கள் இந்த மாசி மாத ஸஞ்சிகை வரப்பெற்றதும் புதுவருட சந்தாவான ரூபாய் 2—0—0 ஐயும் உடனே அனுப்பிவைக்குமாறு பிரார்த்திக்கின்றேம். எவ்வளவு துரிதமாக நமது அன்பர்கள் புதுவருட சந்தாவை அனுப்புகின்றனரோ, அவ்வளவுக்கும் பத்திரிகைக்குப் பேருதவி புரிந்ததாகும்.

ஃ

ஸமுத்திரமானது சூரியவெப்பம் படியும்போது திவலைகளை மேலே யனுப்பி மேகத்தைக்கொண்டு பூமியில் வருஷித்து ஸர்வ ஜனங்களுக்கும் உப

---

நமது கைக்குள் காரியங்கள் அடங்கி நடக்காவிட்டால், அடக்க சக்தியில்லாவிட்டால் கை இருந்து பயன் என்ன ?

காரம் செய்வதுபோல, நமது பத்திரிகையின் அருமையையும் பெருமையையும் நன்குணர்ந்துள்ள கௌரவம் பொருந்திய கனவான்கள் நம்முடைய வேண்டு கோளாகிய சூரிய வெப்பத்திற் இணங்கி, நமது பத்திரிகாபிமானமென்னும் திவலைகளை — மேகங்களாகிற தமது மணியாடர்கள் மூலமாயனுப்பி, பூமியில், அதாவது, தமிழ் நாட்டில் வருஷிக்கச் செய்வார்களென்று மனஸ்பூர்வமாய் எதிர்பார்க்கின்றோம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,

பத்திராசிரியர்.



"மகாமகக்"குளம் முற்றிலும் சேறு எடுத்துச் சுத்தி செய்து ஜலம் விடப்பட்டிருக்கிறதாயினும், இறங்கி ஸ்னானம் செய்கிற ஜனத்திரளின் மிகுதியால், மறுபடியும் சேருகி, அந்த சேற்றில்தான் ஸ்நானம் செய்யும்படியும் நேர்ந்திருக்கிறது. இந்தத் தடவையில் எப்படியிருக்கிறதோ!




# ஒரு தங்கையின் கடிதம்.


அன்புள்ள அக்கா! தங்கள் கடிதம் வெகு சீக்கிரம் கிடைத்துவிட்டது. என் காகிதம் கண்ட பரவசத்தில் உடனே எழுதிவிட்டீர்களாக்கும். ஒரு சின்ன சங்கதி சொல்லுகிறேன். இவ்விதம் நீள நீளமாய்க் கடிதங்களை வெகு ஆசையோடும் எழுதிக் கொள்ளுகிறவர்கள் நேரில் சந்திக்கிறபோது பேசுவதற்கு சங்கதிகளே கிடைக்காமல் ஊமையாய்ப் போகிறார்கள். கலகலப்பாய்ப் பேசுவதுமில்லை. கடிதத்தில்தான் விஸ்தாரமாக எழுதுகிறார்கள். நேரில் வெட்கப்படுகிறார்கள். ஆசையே, அன்பே, பொன்னே, முத்தே, மணியே, கிளியே, தேனே என்று வெகு தித்திப்பாய் எழுதுகிறவர்கள் நேரிலே அதில் ஒரு பேச்சுக்கூட சொல்வதே இல்லை. இதுவும் ஒரு வேடிக்கைதான். ஃ

அதிகப் பேச்சுக்காரி வம்பி, ஆயிரம் வந்தாலும் அவள் வேண்டாம் தம்பி என்று வேதநாயகம்பிள்ளை என்ற மகா பெரியவர் கூறி யிருக்கிறார். நல்ல சங்கதிகளைப் பற்றியும், சுவாமியின் சங்கதிகளைப் பற்றியும் ஒரு பெண் எவ்வளவோ பேசினாலும் அவளுக்கு அதிகப் பேச்சுக்காரி என்றாவது, வம்பி என்றாவது இகழ்ச்சி ஏற்படாது. வெறுமனே வீண் பேச்சுப் பேசுகிறவர்களையே வேதநாயகம்பிள்ளை அவர்கள் அதிகப் பேச்சுக்காரி என்று திட்டியிருப்பதாய் நினைக்கிறேன். படித்த ஒரு பெண் ஒரு பெரிய சபையில் பேசினால் அவளை அதிகப் பேச்சுக்காரி என்று யாராவது திட்டுவார்களா? "ஆகா! எவ்வளவு நல்ல விஷயங்கள் பேசினாள்" என்று கொண்டாடுவார்களே தவிர ஒருபோதும் திட்டமாட்டார்கள் என்றே நினைக்கிறேன். என் இவற்றையெல்லாம் இங்கு குறிப்பிட்டேன் தெரியுமா? அதற்கும் காரணமிருக்கிறது. கடவுள் கிருபையால் உங்களை நான் சந்திக்கும்போது நான் ஊமையாகத்தான் இருப்பேன். பெரிய பெரிய கடிதங்கள் எழுதினாயே, இப்போது பேசமாட்டேன் என்கிறாயே என்று நீங்கள் கேட்கும்படியும் வரும். அதற்குப் பதிலாக ஒரு சின்ன சிரிப்பு சிரிப்பேனே தவிர அப்போதும் பேசமாட்டேன். அதற்காக என் மேல் கோபம் கொள்ளக்கூடாது. நல்ல விஷயங்களைப்பற்றிப் பேசுகிறவர்கள் அதிகப் பேச்சுக்காரி என்ற பட்டம் என் வாங்குகிறதில்லை? அவர்களுக்கு இந்த அளவோடு பேசி, இந்த அளவோடு அந்த வார்த்தையை நிறுத்திவிடவேண்டுமென்கிற 'பேச்சின் அளவு'—பேசவேண்டிய நிதானம் — எல்லாம் தெரிந்திருக்கும்.

பேசக்கூடியவர்களிடத்தில் தான் பேசுவார்கள்; எல்லோரிடமும் பேச மாட்டார்கள். சும்மா சும்மா பேசிய படியே இருக்கவுமாட்டார்கள். ஆன தால், அவர்களுக்குக் கெட்ட பேர் வராது. பேன் குத்தியபடியே ஊர் வம்பு பேசுகிறவர்களின் கூட்டத்தில் இவர்கள் போகமாட்டார்கள். இப்ப டிப்பட்ட நல்ல பெண்ணுக நான் ஆகவேணுமென்று எனக்கு ரொம்ப வும் ஆவலுண்டு.

ஃ

என் அருமை அக்கா! நீங்கள் "பெண்மதி மாலை" படித்திருக்கி றீர்களா? அது வேதநாயகம் பிள்ளை 50-வருஷங்கட்கு முந்தி எழுதியது. பெண்ணுகப் பிறந்தவர்கள் அதைத் தான் முதலில் படிக்கவேண்டும். வெகு நல்ல புஸ்தகம். விலை நாலணு தான் இருக்கும். அது கதைப் புஸ்தகமல்ல. எல்லாம் பெண்கள் அறியவேண்டிய நல்ல சங்கதிகள் கொண்டது. உங்களுக்கு அகப்படா விட்டால் வாங்கி அனுப்புகிறேன்.

ஃ

தகப்பனுர் இன்னும் மருந்து புட்டியை விடவில்லை. புட்டியும் அவரை விடவில்லை. ஸ்ரீ அண்ணு அவர்களுக்குக் கோபம் என்று எழுதி இருந்தீர்களே. ஊருக்குப் போன வர்கள் கடிதம் எழுதாவிட்டால் கோபம் வரவேண்டியது நியாயமே. மனதில் அன்பு இருந்தால்தான் கடி தம் வரவில்லையே என்ற கோபம் உண்டாகும். அண்ணு அவர்களுடைய அன்பு மிகவும் பெரியது. அந்த அன்பையும் அதிகமாக்கிக்கொண்டு, அதோடு இன்னும் கோபத்தையும் அதிகமாக்கிக்கொள்ளும்படி சொல் லுங்கள். எல்லாம் சந்தித்துவிட்டால் ஆயிரம் கடிதங்களில் ஆகக்கூடிய சமாதானம் ஒரு நிமிஷ நேரத்தில் ஆகிவிடும் என்று எண்ணுகிறேன். அன்புள்ள இடத்தில்தான் கோபித் தல், திட்டுதல், விரோதப்படுதல், ஆத்திரமாய்ப் பேசுதல்-எல்லாம் நடக் கும். அன்பில்லாத கட்டையிடம் யார் நெருங்குவார்கள்?

ஃ

இங்கே புதிய நாவல் பைண்டாகி வருவதால் வீடு முழுதும் காகிதக் குப்பையா யிருக்கிறது. இந்தக் குப் பைதான் தகப்பனுரின் பெரிய ஆஸ் தியாக்கும். தகப்பனுர் படிக்காதவரா யிருந்தால் இந்தக் காகிதக் குப்பை அவருக்கு இருக்காதல்லவா?

S. R. கமலவல்லி.

II

## எதிர் பேசும் மனைவி.

புருஷன்:—தேவகி! இன்றைக்கு சனிக்கிழமை விரதயாச்சே, இராத் திரிக்கு என்ன பலகாரம் செய்யப் போகிருய்?

மனைவி:—பலகாரமா? பல்லாவ ரத்தை யெடுத்துப் பரங்கிமலைமேல் தான் அடிக்கவேணும். ஏன்? சும்மா படுத்துக் கொண்டால் இராப் பொழுது பாயோடு போகிறது. என் ஞல் ஒன்றும் இந்த அடுப்பண்டை வெந்துகொண்டு செய்ய முடியாது.

புருஷன்:—அடி கொஞ்சம் உப்பு மாவாவது கிண்டிக் கொடடி, வயிறு பசிக்கிறது.

---

"மகாமகம்" சிறப்பாக சைவர்களுக்கே உரியதெனினும், மற்றவர்க ளுக்கும் அதில் பங்கு இல்லாமலில்லை. தென்னிந்தியாவின் மகத்தான தீர்த்த யாத்திரையாகும்.

மனைவி:—உப்புமாவாவது கிப்புமாவாவது. பசித்தால் ஓட்டலுக்குப்போய் சாப்பிட்டு வர்ரதுதானே.

புருஷன் :—விரதப் பொழுதுக்கு சுத்தமற்ற ஓட்டலில் புசிக்கலாமா?

மனைவி :—எல்லாம் சாப்பிடலாம். ஓட்டலுக்கு மேலேயே நான் சுசியாய்ச்செய்யப்போகிறேன். நீங்களும் போய் நன்றாகச் சாப்பிட்டு எனக்கும் சுடச்சுட வாங்கி வாருங்கள்.

ஃ

☞ கணவனுக்கு உட்படாமல் எதிர்த்துப் பேசும் மனைவியர் பலரைக் கண்டிருப்பதில், அவர்களின் மாடி வீட்டுச் சொந்த வாழ்வு பிறகு கூரைவீட்டு வாடகை வாழ்வானதுதான் அவர்கள் அடைந்தபலன் என்று தெரிகிறது. கழுத்து நிறைய இருந்த ஆபரணங்கள் போய் வெறுந்தாலிக் கழுத்தானதே எதிர்த்துப் பேசியதற்கு வந்த லாபம் போலும் நினைக்கும்படியாகிவிடுகிறது. கணவன் ஒரு புது நகை செய்ய நினைக்கும் வேளையில் இவர்கள் ஒரு அல்ப சங்கதிக்குப் பெரிய சண்டையை வளர்த்துவிட, பேச்சுக்கு மேல் பேச்சு பெருகிப் பிரமாதம் ஆக, புதுநகை செய்ய நினைத்த கணவனின் யோசனையும் அத்துடன் மனது விட்டுப்போய் நின்றுவிடுகிறது. இவ்விதமே, சேர இருந்த செல்வமும் இந்த எதிர்ப்புத்தனத்தால் சேராமல் தரித்திரகதியாகிறது. சச்சரவின்றிக் கணவனோடு அன்னியோன்னியமாயிருந்திருந்தால், பவுன் 13½-ரூபாய் விலையிலிருந்தபோது எவ்வளவோ நகைகள் செய்துகொண்டிருக்கலாம். அது வீட்டுக்கும் ஒரு ஆஸ்தியாகி, ஆபத்துக்கு உதவும்படியும், குடும்பத்துக்கு ஒரு மதிப்பாயும் இருந்திருக்கலாம். பவுன் 19-ரூபாயாகிவிட்ட இப்போதோ புதுநகைக்கு வழியேயில்லை. கணவனை எதிர்க்கும் மடமைதானென்னே! ஐயோ! மூடமே! இதனால், மனைவிக்கும் சுகமில்லை; அவளை மணந்த கணவனுக்கும் திருப்திகரமான வாழ்க்கையில்லை. நெருங்கிவரயிருந்த செல்வமும், புது நகைகளும் வராமலே தூர விலகி, சூழ்ந்து நின்ற சுற்றமும் தன் வாய்க் கொழுப்பால் கடும்பகையாகி, எங்கும் கேவலப் பேச்சாய்த் தாழ்வு ஸம்பவிக்கின்றது. கணவனை உபசரிக்காத கைகள் இருந்தென்ன? போயென்ன?

R. கோமளவல்லி அம்மாள்.

---

"மகாமகத்" திற்குப் பல ஊர்களிலிருந்தும் வியாபாரிகள் வந்து தங்களின் வியாபாரப் பிரசுர நோட்டீஸ்களை ஜனங்களுக்கு வாரி யிறைப்பார்கள். ஜனங்களோ அவற்றில் தின்பண்டம் வைத்துப் புசிப்பார்கள். நாடகம், சினிமா நோட்டீஸ் ஒன்றுக்குத்தான் அன்றைய தினமே பையில் பணம் சேர்கிறது.



"மகாமக" த்திற்குப் புருஷர்கள்மட்டுமே போவதென்று ஏற்பட்டால் அங்கு வந்துள்ள கடைகளுக்கு எந்த வியாபாரமும் நடவாது. பெண்களுடன் சென்றால்தான் போகிறவர்களுக்கும் சிறப்பு. கடைக்காரர்களுக்கும் வியாபாரம் நன்றாக ஆகும். பெண்ணரசிகளில்லாவிடில் கடைவீதியின் வியாபாரமே முக்கால்பங்கு தூங்கிவிடும்.

# ஓர் புதல்வனின் புலம்பல்.



என்னுடையவும், பெற்ரோர் சகோதரர்களுடையும் சுபாவ இயல்பைப் பொறுத்தளவில் நான் கொண்டவள் இல்வாழ்க்கைக்குப் பொருத்த மற்றவளேயாவள். தாயற்ற சிறார்களை ஆதரிக்கும் தன்மையதான உள்ளன்பு, சகோதர வாஞ்சை, சுய பரித்யாகம் இத்தியாதி நற்குணங்கள் தன் சகோதரி மகளைவிட, பிறிதொரு மங்கையிடம் மிளிர்வது அசாத்திய மென, என் தந்தை கனவு கண்டு அவளேயே எனக்கு அவர் விருப்பப்படியே திருமணஞ் செய்வித்தார். ஆனல், அது வீண் கனவாகவே முடிந்தது. அதன் பலனாக நான் கண்ட அனுபவ சாரம் பின் வருமாறு :—

ஃ

கணவனை சதா துன பத்தி லாழ்த்தி ஆட்டிவைக்கும் மங்கையர் இந்நாளில் எங்கும் மலிந்து விட்டனர். பதியே கண்கண்ட தெய்வமென்று அவன் இன்ப துன்பங்களைத் தானும் பகிர்ந்தனுபவிப்பதே, தன் வாழ்வின் லட்சியமெனக் கருதும் பதிவிரதைகள் எங்கோ ஆயிரத்திலொருவர்தான். நாகரீகம் முதிர, முதிர பதிபக்தி யென்பது குதிரைக் கொம்பாகி விட்டது.

ஃ

உலக அபவாதத்திற்கஞ்சி, மானமாய் வாழ நினைக்கும் கணவனொருவன், தன் மனைவி தனக்கு வருத்துவிக்கும் இன்னல் இடுக்கண்களை நெஞ்சகத்தே தாங்கி, சுமந்து, எவ்விதமும் மறக்கவே பிரயத்தனிக்கிறன். ஆனல், "புல்லானாலும் புருடன்" "கல்லானாலும் கணவன்" யென்பதை முற்றும் மறந்து, கண்டதே காட்சி கொண்டதே கோலமென பரபுருஷரை இச்சிக்க முற்படுவாளோ யாகில், அதனினும் கொடிய வன்மை பொருந்திய துரோகச்செயல் வேறில்லை. அதைவிட, கணவனுக்கு நரகமும் வேறில்லை. இவ்வஞ்சகத்தின் விஷத்தன்மையானது கணவனை யென்றென்றைக்கும் மறந்துவிடச் செய்ய வொண்ணாத நெருப்புச் சுவாலையாயிருக்குமெனில் மிகையாகாது. இது தன் பதியை, கத்தியால் குத்திக் கொலை செய்வதினும் பன்மடங்கு பாதகமானதாகும். உத்தம கணவன் இத்தால் படும் வாதையை வருணிக்க இயலுமோ? இந்தச் சூழ்வினையால் புனிதமான விவாக பாந்தவ்யம் முறிந்து, என்றும் காண முகத்தினராய் ஊர் துறந்து பிரிந்து பாழடைந்தோர் எத்தனை பேரோ? ஐயோ! ஈசா! இதுதானு விவாக சுகம்! ஆ! கண்ராவியே! ஓயாது பெருகும் கண்ணீரே!!

ஒரு குமாரன்.

---

"மகாமகத்"திற்கு அதிக ஜனத்திரள் செல்வதால் மகாமகத்துக்குச் சில தினங்கள் முன்னதாகவே சென்று ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்புகிறவர்களும் உண்டு.




## 3. இல்லறம்.

(598-ம் பக்கத் தொடர்ச்சி.)

318. "பதிவிரதைக்குப் பர்த்தாவே தெய்வம்."

ஸ்திரீ ரத்நங்கள் தங்களின் பதியையே தெய்வமென்று கருதி, பதி பாத சேவையே பரம பாக்கியமென்று எண்ணி, இல்லறத்திற்கேற்ற துணைவி களாய் ஜ்வலித்து குலாபிவிர்த்தியை நாடி விவேகிகளாய். வித்தியாவக்தை களாய் விளங்கவேண்டும். ஸ்திரீகள் உத்தம மார்க்கத்தை யனுஸரிகக வேண்டுமானல், நமது பூர்வீக புராண இதிகாஸங்களைக் கற்றல் போது மானது. ஸ்திரீகளுக்கு மானமே ஆபரணம், ஸன்மார்க்கமே உற்ற தோழி. அவர்கள் பதியே பிராணனென்று ஹிருதய பூர்வமாய் நினைத்திருக்கவேண் டும். பதியே ஸ்வர்க்கம். அந்தப் பதியின் பிரியமே தங்களுக்கு முக்கிய பந்து. பதி வார்த்தைக்குப் பதில் சொல்லாதவளே உத்தமி. அவளே பத்நி யாவாள். எந்த ஸ்திரீ இவ்வித உத்தம நடத்தைகளை யனுஸரியாமல் ஸ்வேச் சாதிகாரியாய்த் திரிகிருளோ அவளை நராதமி யென்றும், துஷ்டை யென்றும் உலகம் இகழ்ந்து தூற்றும். ஆதி முதல் புருஷர்க்ள் வெளியே திரிந்து ஸம் பாதிப்பதும், ஸ்திரீகள் உள்ளிருந்து கிருக கிருத்யங்களைச் செய்து, ஸன் மார்க்கத்தைக் கைப்பற்றி எல்லோராலும் கொண்டாடப் படுவதும் வழக்கமா யிருக்கிறது. நமது பரதகண்டத்தில் ராஜாதிராஜர்களும் கோடானு கோடி பிரபுக்களும் தர்மவான்களும் வஸித்து தங்கள் காலத்தைக் கழித் திருக்கின்றனர். அவர்களின் தர்ம பத்தினிகள் தங்கள் பதிகளைத் தொழுது பரலோக மார்க்கத்தை யனுஸரித்தார்களேயன்றி, துராசாரத்தையும், பதிக் குத் துரோகமாக நடப்பதையும் கைக்கொள்ளவில்லை. அவர்களின் வழியை நமது சகோதரிகள் அனுஸரித்துப் பதி பாத ஸேவகிகளாய் விளங்கவேண் டும். இல்வாழ்க்கையில் ஒரு பெரிய ரகசிய மென்னவெனில். எந்த ஸ்திரீ யும் தன் கணவனுக்குத் தன்னிடமும், வீட்டினிடமும் வெறுப்பு உண்டாகி விடாமல் கசப்புக்கு வழியில்லாமல் ஜாக்கிரதைப் பட்டுக்கொள்ளவேண்டும். ஸம்பாத்திய புருஷனுகிய கணவனுக்கு வீட்டில் உபசரிப்பதற்குமேல் வெளி யில் உபசரிக்கப்பெறுவதற்கும், மற்ற காம இன்பங்களை நுகர்வதற்கும் கைப் பணம் செலவழித்தால் எவ்வளவோ வசதிகள் இருக்கின்றன. வீட்டுக்குள் அடைபட்டு வீட்டில் இட்டதைத் தின்று கிடக்கவேண்டுமென்ற விசுவாச அடக்கம் ஆடவனை விட்டு அகன்று விட்டால், அவன் தன் கைப்பணத்தை

---

"மகாமக" யாத்திரை ஹிந்துக்களுக்கு ஏற்பட்டிருப்பதுபோலவே. அந்தந்த மதஸ்தர்களுக்கும் ஒவ்வொரு யாத்திரை மிக்க விசேஷமானதாய்ப் பாராட்டப்படுகிறது.

எவ்வளவேனும் செல விடுவதற்கும், வெளியிலுள்ள அதிகப்பட்ட மித மீறிய சுகங்களையும் ருசிகளையும் அனுபவிப்பதற்கும் பின்னடையான். அவ்விதம் ஆடவனின் மனது சென்றுவிடில் வெகு சீக்கிரத்தில் துன்மார்க்கத்தில் பிரவர்த்தித்து உள்ள சொத்துகள் யாவற்றையும் துர்விநியோகப்படுத்தி, சீக்கிரம் தன் குடும்பத்தைத் தரித்திரா தேவிக்கு வாசஸ்தானமாக்கி விடுவான். ஸ்திரீயானவள் தன் கணவன் வீட்டுக்கு அடங்கி நடக்கும் வரையில் தான் கணவனை அதிகாரம் செய்யலாமேயன்றி, அவன் வீட்டின்படி தாண்டி எல்லை மீறி விட்டால், உன் உணவும் தேவையில்லை—நீயும் தேவையில்லையென்று வெளியேறி விட்டால், வேறிடத்தில் உணவும் படுக்கையும் கொள்ளத்தொடங்கி விட்டால், பிறகு ஸ்திரீ ஆடவனை எவ்வித அதிகாரமும் செய்வதற்கு இயலாது. தன் மக்களுடன் வயிறு வாடி, உடல் ஒட்டி, வறுமைப் பிணியில் அலங்கோலப் படவேண்டியதுதான். ஸ்திரீயின் வாய் வீச்செல்லாம்—அவளுடைய எதிர்ப்பின் தைரியமெல்லாம்—தன் புருஷன் தன்னை விட்டுப்போய் விடான் என்கிற பலமான நினைப்பினால்தான். இந்த நாரி படுத்துகிற பாட்டில் ஆடவனுக்கு மனம் தாளாது வேறு வீடும் வேறு ஸ்திரீயையும் கொண்டு விடும்படி மனம் தூண்டிவிட, அதனால் குடும்பமே கெடுகிறது. பதிவிரதா ரத்நங்கள் இவ்வாறெல்லாம் செய்யார். உத்தம கணவன் கிடைத்தும், அவனோடு ஸமாதானமாய் வாழத்தெரியாத தூர்த்தைகளே கண்டபடி நடந்து பிறகு தெரு சிரிக்க விழிப்பர். விவாகம் செய்து கொண்டது தர்மங்களை யனுசரித்து, தெய்வப் பிரீதியாய் நடந்து, உத்தமமான பெயரைப் பெறுவதற்கே யன்றி, கணவனை விரோதித்துக்கொண்டு கண்ணீர் விடுவதற்கல்ல.

---

**பரிசு! பரிசு!! பரிசு!!!**

நமது அமிர்த குணபோதினியின் எட்டாம் ஆண்டின் புது வருட சந்தாவை அன்புடன் **20-3-33** தேதிக்குள் எமக்கு மணியார்டர் செய்யுங்கள். இதற்காக ஏற்படுத்தி யிருக்கும் 50-டைம்பீஸ் கெடியாரப் போட்டிப் பரிசில் தாங்களும் சேர்ந்துகொள்ளுங்கள். சந்தாதாரர் அன்றி இனி புதியதாகச் சேருகின்ற சந்தாதார்க்கும் இந்தபோட்டிப்பரிசில் உரிமை யுண்டாதலின் முன்னதாகவே மேற்குறித்த தேதிக்குள் சந்தாவை யனுப்பிவிட வேண்டுமென்று இதன் மூலம் தெரிவிக்கின்றோம்.

☞ முழு விவரம் முதல் பக்கத்திலுள்ள 9ம்மாத அனுபந்தத்தைப் பார்க்கவும்.

மானேஜர்.




(526-ம் பக்கத் தொடர்ச்சி.)



"டிக்கன்ஸ்" என்பவரின் மொழிகள்.

872. When I take a gentleman to my house, no matter whether he is nineteen, twenty-nine or ninety, I take him there in a splrit of confidence.

என்னுடைய வீட்டிற்கு நான் ஒரு கண்ணியவானை அழைத்துச் செல்லும்போது—அவனுக்கு வயது 19, 29, அல்லது 90-ஆக இருந்தாலும்—நம்பிக்கையான உற்சாகத்துடனேயே அவனை இட்டுச் செல்கிறேன். (அதாவது, விருந்தினரை மனஸ்பூர்வமாகவே வரவேற்கிறேன் என்றபடி.)

873. Know that we must trust and hope, and neither doubt ourselves, nor doubt the Good in one another.

நாம் உறுதியும் நம்பிக்கையும் கொள்ளவேண்டும். நம்மை நாமாகவோ அல்லது ஒருவருக்கொருவரிடமுள்ள நல்லதையோ நாம் ஸந்தேகிக்கலாகாது.

874. Be diligent,...work for a steady independence, and be happy.

நீ உத்ஸாகமாக இரு. எப்போதும் சுயேச்சையாக உழை. சந்தோஷமாக இரு.

875. We must guard against being too sanguine. There's no occasion for it, either, because we're determined to make the best of every-thing, after we know the worst of it.

மிக்க ஆசையுடன் எதிர்நோக்குவதை நாம் திருத்தவேண்டும். அவ்வாறு இருக்க சந்தர்ப்பமில்லை. ஏனெனில், ஒவ்வொன்றின் கெடுதியையும் நாம் தெரிந்துகொண்ட பின்பும், அதனின்றும் நல்லதை—சிறந்ததை—உண்டாக்கத் தீர்மானித்திருக்கிறோம்.

876 That's the way you know the noble-minded Sir! Ever forgiving and ever affable.

என்றும் மன்னிப்பதும், என்றும் சாதுவாக இருப்பதும் பெருந்தகையினரின் வழி என்பதைத் தெரிந்து கொள்ளவும்.

877. Rich folks may ride on camels, but it ain't so easy for'em to see out of a needle's eye.

ஒட்டகத்தின் மீது பிரபுக்கள் சவாரி செய்யலாம். ஆனால், அவ்விதமாகவே ஒரு ஊசிக்காதின் வழியாகப் பார்க்க முடியா.

---

சென்ற "மகாமகத்"தில் கும்பகோணத்தில் சொந்தவீட்டிடனிருந்து பலரை வரவேற்று உபசரித்தவர்களிற் சிலர் இந்த "மகாமக"த்தில் வெளியூரில் வாடகை வீட்டில் வசிப்பவராகவும் மாறிவிட்டிருக்கின்றனர்.

878. It is a world we need be careful how we libel, Heaven forgive us, for it is a world of sacred mysteries, and its Creator only knows what lies beneath the surface of His lightest image.

இவ்வுலகத்தில் எங்கே எதாவ தொன்றை நிந்தித்துப் பேசிவிடப் போகிறேமோ என்று நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். கடவுள் நம்மை மன்னிப்பாராக. எனெனில், தெய்வீகமான அற்புதங்கள் நிறைந்த தொரு உலகமிது. அதை உண்டாக்குகிற அவன் ஒருவனுக்கே அதிலுள்ள உருவத்தின் மகிமை தெரியும்.

879. I would rather have the affectionate regard of my fellowmen than I would have heaps and mines of gold.

குவியல் குவியலாகவும் சுரங்கஞ் சுரங்கமாகவும் தங்கத்தைப் பெறுவதைவிட, என்னைப்போன்ற சகோதரர்களின் அன்பையும், மதிப்பையும் பெற எனக்குப் பிரியம்.

880. Mystery and disappointment are not absolutely indispensible to the growth of love, but they are often very powerful auxiliaries.

நிச்சயமும் ஏமாற்றமும் அன்பின் வளர்ச்சிக்குப் பிரதானமாக இருப்பவையல்ல. ஆனால் அவைகள் சக்தி வாய்ந்த துணைக் கருவிகளாகும்.

881. Our life is not too easy perhaps: taken altogether, it will bear any little smoothing we can give it

நம்முடைய உயிர் வாழ்க்கை அவ்வளவு எளியதல்ல. எவ்வாறு அதற்கு மெருகு கொடுப்பினும் அது தாங்கிக்கொள்ளக் கூடியதே.

P. G குலசேகரன்.

## நாகரீக ஸம்பாத்தியங்கள்.

நாகரீக லோகத்தில் பெரும்பான்மையான ஸம்பாத்திய வஸ்துக்கள் உண்ணல், களித்தல், கல்வி, பயிற்சி, அரசு, வியாஜ்யம், முதலியன—தத்தமக்குரிய எல்லையை மீறி அதிக எல்லையை வியாபித்து நிற்கின்றன. இவற்றால் உண்டாகும் சுமையில் பெரும் பகுதி அநாவசியம். இதைச் சுமப்பதில் மனிதன் தனது பெரிய பலத்தைக் காட்டுகிறானே யொழிய, புத்திக்கூர்மையைக் காட்டவில்லை. இதை வானத்திலிருந்து பார்க்கும் தேவர்களுக்கு—ஒரு ராக்ஷஸன் குளத்தில் அதிக ஆழத்தில் இறங்கி, நீச்சுத் தெரியாமல் தத்தளிக்கையில், அவன் குள முழுவதையும் தன் வீணான வலிய முயற்சிகளால் குழப்பிக்கொண்டு, இங்ஙனம் குழப்புவதால் ஏதேனும் லாபம் கிடைக்குமென்ற மூட நம்பிக்கை கொள்வது போலே—தோன்றும்.

# கடலுக்குள் வெளிச்சம்.

## சமுத்திர வர்ணம்—மீனின் பிரகாஸம்.



கடலின் ஆழம் ஒரிடத்திற்போவில்லாது பல இடங்களில் பலவிதமாய் மாறுபட்டிருக்கும். ஸர்—ஜெ—ஸி—ராஸ் (Sir J. C. Ross) என்பவர் கடலில் மிகுந்த ஆழமான இடம் ஒன்றைக் கண்டுபிடித்து அவ்விடத்தில் சங்கிலியால் அளந்து பார்க்க, அது 27000-அடி ஆழமிருந்ததாம். கடலின் அடிப்பாகம் மிகவும் வழவழப்பாய் சமமான இடமாயிருக்குமென்று நினைக்கலாகாது. பூமியில் எப்படிப் பள்ளமும் மேடும் கல்லும் கரடுமாகக் காணப்படுகிறதோ, அப்படியே கடலின் அடிப்பாகத்திலும் அநேக மலைகளும் கரடு முரடுகளும் காணப்படுகின்றன. எனவே, கடலினுடைய ஆழத்திற்கு அளவு சொல்ல முடியாதென்று தோன்றுகிறது. என்றாலும், அதனுடைய அதிக ஆழம் மிக உயர்ந்த மலையினுடைய உயர அளவுக்குச் சரியாக இருக்குமென்று மதிக்கப்படுகிறது. அதாவது, நாலு அல்லது ஐந்துமைல் ஆழமுடையதாய் அஃதிருக்குமென்று ஊகிக்கப்படுகிறது.

ஃ

சாதாரணமாய் ஜலத்தில் இறங்கிப் பார்க்கும்பொழுது உள்ளே வெளிச்சமிருப்பதாய்த் தெரிகிறது. ஆனால், எவ்வளவு ஆழத்திற் சென்றபோதிலும் இப்படியே இருக்குமா என்பதே இப்போது நம்முடைய கேள்வி. கடலில் ஆழமாகச் செல்லச் செல்ல அதிக இருள் விளைந்து அல்லல் செய்கிறதென்று அனுபவமுடையார் அறைகூவுகிறார்கள். சிறிது தூரம் பிரகாஸமாய் வெளிச்சம் தெரிகிறதென்றும், ஆனால், உள் நோக்கிப் போகப்போக கண்ணுக்கு ஒன்றும் தெரியவில்லை யென்றும், ஜோ என்று ஒரே அந்தகாரமா யிருக்கிறதென்றும், இரவில் நக்ஷத்திர ஒளியும், பகலில் சூர்யப்பிரகாஸமும் அங்கே ஒன்றும் பிரயோஜனப்படவில்லை யென்றும் அவர்கள் கூறுகிறார்கள். சாதாரணமாய்க் கடலின் உள்ளே 700-அடி தூரம் வரையிலும் பிரகாஸம் வியாபிக்கிறதென்றும், அதன் பிறகு அந்தகாரமே சொந்தமாய்க் குடிகொண்டிருக்கிறதென்றும் சொல்லக்கூடும்.

ஃ

சமுத்திரத்தின் ஆழம் இவ்வாறாக, அதன் நிறம் எத்தகையதென்று நாம் ஆலோசிக்கவேண்டும். சாதாரணமாய்க் கடலின் நிறம் நீல நிறமென்பது அனைவருக்கும் தெரிந்த விஷயமே. சுத்த ஜலம் நீல நிறமுடைய தென்பது விஞ்ஞான சாஸ்திரிகளின் துணிபு. இப்படி சமுத்திரத்தினுடைய வர்ணம் நீலவர்ணமாயிருந்தபோதிலும், சிற்சில இடங்களில் அது சுத்த வெள்ளை நிறமாயும், ரத்தம்போல் சிவந்த நிறமாயும், மஞ்சள் நிறமாயும் இருக்கிறதென்று எற்படுகிறது. ஸ்கோர்ஸ்பீ (Scoresby) என்ற யாத்திரைக்காரர் ஆர்க்டிக் சமுத்திரத்தில் ஜலம் பச்சை நிறமாயிருக்கக் கண்டாராம். அஃது யாதாயிருக்கலாமென்று பூதக் கண்ணாடியின் உதவியால் சோதனை

செய்யும்போது சிறு பூச்சிகள் கணக்கில்லாதன அங்கு அடர்ந்து படர்ந்திருந்ததாகவும், அதனுல் அவ்வித சிவப்பு நிறம் காட்டியதாகவும் தெரியவந்ததாம். வேறு சில இடங்களில் ஸமுத்திர ஜலத்தின் நிறம் ரத்தத்தைப்போல் மிகச் சிவந்திருக்குமாம். சில இடங்களில் பால்போல் வெளுத்திருக்குமென்றும் சொல்லப்படுகிறது இவைகளை ஆலோசிக்கும்போது நம்மவர்கள் சப்த சமுத்திரமென்று சொல்வதும், பால் சமுத்திரம், கள் சமுத்திரம் உண்டென்று சொல்வதும் இவைகளோடு சிறிதேனும் பொருத்தமுடையவைகளாய்க் காணவில்லையா?

ஃ

இது நிற்க, ஸமுத்திரத்தில் அநேக மீன்கள் வெகு பிரகாஸமாய் ஓடித்திரிகின்றனவாம். வண்ணானின் கழுதை துணிகள் கணக்கில்லாதன சுமப்பதுபோல் இந்த மீன்கள் கணக்கு வழக்கில்லாமல் லக்ஷமும் கோடியுமாய் முதுகில் கண்ணுக்குத் தெரியாத சிறு பிரகாஸம் பொருந்திய ஜீவராசிகளைத் தாங்கித் திரிவனவாம். சமுத்திரத்துக்குள் தாங்கள் இரை தேடவும் ஓடியாடவும் இம்மீன்களுக்கு இந்த வெளிச்சம் பெருத்த உதவியா யிருக்கிறதாம். மீன்கள் இறந்த சில நாழிகை வரைக்கும். அதாவது. அது அழுகிப் போகாமல் உணவுக்கு உபயோகமாகிற வரைக்கும் கடவுளால் அமைக்கப்பட்டதுபோல் இந்த வெளிச்சம் இலங்கித் துலங்கிப் பிறகு மறைந்து விடுமாம். இயற்கையின் வனப்பை ஊன்றி நோக்குந்தோறும் கடவுளின் தன்மை காட்சிக்குவராமற் போகாது.



## நமது அந்தகார நிலைமை.

மனிதர்கள் ஒன்று சேர்ந்து யோசனை பண்ணித் தாம் என்றைக்கும் பிரிவுபட்டு நிற்க வழிகள் தேடியதை நமது நாட்டிலும் கண்டோம். நமக்கு மிகவும் இனிமையாகத் தோன்றிய ஸ்வதந்திரங்களைப் பிறர் அநுபவியாமல் தடுக்க நாமும் முயன்றோம். ஸர்வ ஸாதாரணமாக வழங்கத்தக்க (ஆலயப் பிரவேஸம் போன்ற) உரிமைகளுக்குச் 'சிறப்புரிமைகள்' என்று பெயர் சூட்டி அதைத் தராமல் மாநுஷிகத்தை அவமானப்படுத்தினோம். நமக்குப் பலமென்று கருதிய முறைமை ஐயோ! நமக்குத் துர்ப்பலமாக முண்டது. நம்மை நாமே புண்படுத்திக்கொண்டு பல நூற்றுண்டுகளாக விருத்தி கெட்டு மடிகிறோம்.

—ஸர். ரவீந்திரநாத் தாகூர்.

தான் பிரமாதமாக வேலை செய்து, ஜனங்களைத் திருத்தி ஊருக்கு உழைத்திருப்பதாக நினைத்துக்கொள்வோன் அறியாமைத் திரைக்குள் இருப்பவனேயாவான். தன்னை எத்தனை பேர் அருவருக்கிறார்களென்பதையும், அதற்கு இணங்கத் தனக்கு எவ்வளவு அற்ப புத்தியும் கர்வமும் மமதையும் இருக்கிறதென்பதையும் அவன் அறிவதே யில்லை.

# உபாத்தியாயர்—ஒரு தோட்டக்காரன்.



இவ்வுலகினில் மிகவும் அந்தமும், விந்தையுமான உருவங்களை உண்டாக்க வல்லவர்கள் மூவர்தான் என்று ஒருவாறு தெளியலாம். அம்மூவரில் கட்டடங்களை நிருபணஞ் செய்யும் ஆற்றலுள்ளவன் முதலானவன். அவன், தான் கட்டி முடிக்கத் தொடங்கிய கட்டடம் பூர்த்தியாகும்வரை தனக்கு வேண்டிய செங்கல்களையும் கருங்கல்களையும், மற்ற சாமான்களையும் சேகரித்து வைத்துக்கொண்டு, இவற்றினை வேண்டியவாறு சரிப்படுத்தித் தன் மனதில் கல்பித்து நிர்மாணஞ் செய்த கட்டடம் நிலத்தில் அழகியதோர் மாளிகையாக அமைந்து முடியும்வரை. ஒவ்வொன்ருகச் சேர்த்துக் கட்டிப்பூர்த்தி செய்கின்ருன். அதற்குப் பிறகு இரண்டாவது மனிதன் சிற்பியாவான். கரடு முரடான பெரிய கற்பாறையை எடுத்துத் தன் மனதில் எண்ணிய உருவம் எண்ணியபடியே எதிரில் நிற்கும் வரை செதுக்கி, அவ்வுருவததை வெளியில் யாவரும் கண்டு உவக்கச் செய்கிருன். இதற்குப்பின் மூன்ருவதாகத் தோட்டக்காரனைக் குறிப்பிடவேண்டும். அவன் தன் தோட்டத்தில் சிறுமீன் சினையினும் நுட்பமாகிய விதைகளை நடுகிருன். அந்தச் சின்னஞ் சிறிய விதைக்குள் மனிதனது மனதினுல் சிந்திக்க ஒண்ணுததும், அறிவிற்கு எட்டாததும், கைத்திறத்தினுல் செய்து முடிக்க வொண்ணுததுமான ஒரு தனிப்பெரும் அகண்ட உருவம் அடைந்துள்ளது. அப்படிப்பட்ட விதையைப் போஷித்துக் கண்ணை இமை காப்பது போல் காக்கின்ருன்.

ஃ

இந்தத் தோட்டக்காரனைப்போல் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் சிறு குழந்தைகளைத் தன் ஆதரணையின் கீழ் வைத்துக்கொள்ளும் பொழுது, மிகவும் நுட்பமான விதைகளுடன் பழகுகிறவர் போலாகிருர்.

ஃ

பாதுகாக்குந் தன்மையினுலும், தேர்ச்சி யடைவிக்குந் தன்மையினுலும், தேக மனேசக்திகளுக்கு வேண்டிய ஆகாரத்தை அப்போதைக் கப்போது அளித்துச் சிறுவர்களின் இருதயத்திலும் மூளையிலுமுள்ள தெய்வீக சக்தியை மலரும்படிச் செய்வதினுலும், தோட்டக்காரனுக்குச் சமமாக உபாத்தியாயர் வேலை செய்து சிறு குழந்தைகளாகிய வித்திலிருந்து பெரிய ஞான கலைகளாகிய மலர்களும், காய்களும், கனிகளும் தோற்றி உலகுக்கு உபகாரமாகும் வண்ணம் செய்கின்ருர். அவரது உழைப்புக்குச் சரியான கைம்மாறு உலகத்தாரால் செய்ய முடியாது.

ஃ

ஆகவே, உபாத்தியாயரின் முறைமையும், தோட்டக்காரனது முறைமையும் ஒத்திருக்கின்றது. இருவரும் தங்கள் தங்கள் தொழில் முறையில் மிகவும் நுட்பமான

---

சென்ற "மகாமகத்"தின்போது முதல் தாரத்துடன் ஆநந்த வாழ்க்கை. இந்த "மகாமகத்"திலோ இரண்டாந்தாரத்துடனே வீற்றிருக்கை! சண்டை சச்சரவு கலகமும் வேறே! சிலவேளைகளில் சமாதானமும் சந்தோஷமுங்கூட!

பொருள்களில் தங்கள் வாணுள் முழு மையும் கழிக்கின்றனர். சிறு விதைகளுக்குள் பெரிய விருக்ஷங்கள் அடங்கி யிருப்பதுபோல், சிறுவர்களின் சிறு ஹிருதயத்தில் இனிவரப் போகும் உலகம் அடங்கி யிருக்கின் றது. இனிவரும் உலகை இப்போது தயாராக்குகிற வேலை உபாத்தியாயரின் கையில்தான் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. தோட்டக்காரனின் உழைப்புக்குத் தக்கபடி தோட்டம் அழகாய் அமைவதுபோல், உபாத்தியாயரின் திறமைக்குத் தக்கவாறு சிறுவர்களும் தயாராக்கப்படுகிறுர்கள்.

ச. முனிஸ்வாமி பிள்ளை.
சரஸ்வதி சபைத்தலைவர்,
டர்பன், நெட்டால், தென்னுப்பிரிகா.

## தனக்கு வேண்டியவர்களும் பிறரும்.

தனக்கு மிகவும் வேண்டியவர்கள் தனது இல்லத்திற்கு வரின், அவர்கள் புசிப்பின் விமரிசைகளையோ, மரியாதைகளையோ, கவனியாமல், தன்னுடைய அன்பையே பெரிதும் பாராட்டுவார்களென்றும், தன்னுடன் பேசிக்கொண்டிருப்பதொன்றே அன்னேருக்குப் பேரின்பம் தருவதாகுமென்றும், அவர்கள் தன் சொந்த மனிதர்களாய், வீட்டுக் குழந்தைகள் போலிருப்பரென்றும் நினைக்கின்ருன் இவ்வித நினைவுடன் அவர்களை அன்புடன் உபசரிக்கிருன். வந்தவர்களும் குற்றமே எண்ணுதவர்களாகி மனமொத்து நின்று மகிழ்ச்சி குலாவுகிருர்கள். ஆனல், தனக்கு வேண்டிய ஒருவனுடன் அவனைச் சேர்ந்த சிலரும் வரில், அவர்களை மிக மரியாதையுடன் உபசரிக்கவேண்டுமென்றும், ஏதாவது தவறுகள் பேசக்கூடுமென்றும் கவலைப்படுகிருன். இந்த நிலையில் வந்த அந்த சிலர் இன்னும் சில நாள் அங்கு இருக்க விரும்புகின்றனர். வீட்டுக்காரனே தனது நண்பன் எத்தனை நாளிருப்பினும் குற்றம் வராது; அவன் வீட்டு மனிதன்போல் சேர்ந்து பேதமின்றி யிருப்பான்; அவனுடன் வந்தவர்களோ அவ்வித மனப்பான்மைகொண்டு சேர்ந்து இரார்களாதலின், எந்த உபசரிப்பில் என்ன தவறு நேருமோ, அதனல் நண்பனின் நேசம் கெடுமோ வென்றும் கவலைப்படுகிருன். இவ்விதம் கவலைப் படும்படி—வீட்டிற்கு வருவோருடைய ஒற்றுமையும் வேற்றுமையுமான முகமே முதலில் தெரிவித்து விடுகின்றது.

எவன் தனது வாழ்க்கையில் யாதொரு காரியத்தையும் லட்சியமாகக் கொள்ளா திருக்கிறனே, அவன் பலஹீனத்தின் அறிகுறிகளாகிய சில்லரைத் தொந்தரவுக்கும், அச்சத்திற்கும், துன்பத்திற்கும் எளிதில் இரையாவான்.

# ஸூக்ஷ்ம சக்திகள்.



நாம், நமது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம் பொறிகளுக்குப் புலனாவதுமட்டும் நித்தியமானவை. அவை மட்டுமே பிரபஞ்சம் முழுமையும் அளாவி இருக்கின்றன என்று எண்ணு மியல்புடையவர்கள். உண்மையாகவே, தென்படுபவைகள்—ஒழுங்காக உருப்படுத்தி, சரியாக நிலைப்படுத்துபவை—மறைந்து இயங்கும் மாயாசக்திகள் என்பது நம்மால் கிரகிக்க முடிவதில்லை. புலனறிவுகட் கெட்டாத, அகன்று விசாலமான, ஒரு பெரிய பிரபஞ்சத்தின் சிறு பகுதிமட்டுமே நமக்குத் தென்படும் இவ்வுலகமென்பதும், அவ்விதம் மறைந்து இயங்கும் உலகம், இச்சிறு பகுதியைத் தன்னுள் அடக்கியும், தான் அதனுள் அடங்கியும வியாபித்திருக்கின்ற தென்பதும், அவ்வகன்ற பிரபஞ்சத்தின் சக்திகளே இச்சிறு பாகத்தைத் தாங்கி நிற்கின்றன வென்பதும் மறுக்க முடியாத உண்மைகள். ஆகர்ஷணம், காந்தம், மின்சாரம் அவ்விதச் சக்திகளில் சில. இவை சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் என்னும் நமது ஐம் புலன்களுக்குத் தென்படாவிடினும், எவ்விதம் கிரியை செய்கின்றன என்பதும், எவ்விதம் நமக்குப் பயன்படும் என்பதும் நாம் அறிவோம்.

ஃ

சற்று உற்றுநோக்கின், காணப்படும் எவையும், மறைந்தியங்கும் மற்ற சக்திகளைச் சார்ந்து நிற்கின்றன என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும். புலனறிவுக்குத் தென்படாத நமது ஆன்மாவானது—தென்படும் இத்தூல சரீரத்தை நடத்திச் செலுத்துவதும், நமது நாடோடிய அன்றாடகஜீவியம், நாம் பற்றியொழுகப் பிரயாசைப்படும் உயரிய செம்மையான நோக்கங்களால் அடக்கி நடத்தப்படுவதும் உதாரணங்களாகும். மறைந்தியங்கும் இச்சூக்ஷ்ம சக்திகள் நமது ஆவியைத் தாங்கி எதிர்ப்படும் இடைஞ்சல்களை மேற்கொண்டு பெருஞ் சிரமத்தினிடையே தாம் கொண்டிருக்கும் மேலான இலக்கை நோக்கி தொடர்ந்தேறிச் செல்லும். அவை நடப்பிக்கும் கிரியைகள் ஆச்சரியகரமானவை. கனவுகளும், காட்சிகளும், தரிசனங்களும், நம்பிக்கைகளும், நாம் சாதாரணமாக எண்ணுகிறபடி, உபயோகமற்றவையல்ல, அவைகளின் சக்தி பீரங்கி முதலிய கருவிகளின் சக்தியையும் மேற்கொள்ளும்.

ஃ

எல்லாவித சக்திகளுக்கும் மேம்பட்டதும், வல்லமை பொருந்தியதும், உறுதியானதுமான சக்தி நம் பொறிகளுக்குப் புலப்படாததும், உணர்ச்சிக்குமட்டுமே தென்படுவதுமாகிய பரப்பிரம்மமாகிய அருட்சக்தி. அவரே நமது வாழ்க்கைக்கு ஆதிமூல காரணர்; நமது மேலான உயரிய ஆசைகளுக்கும், நம்பிக்கைகளுக்கும் புத்துணர்வளித்து உற்சாகப்படுத்தி ஊகிப்பவர். மானிடர் அவரது பிரசன்னத்தை உணர்ந்தாலும் உணராவிடினும் அவர் இருப்பதுமட்டும்

---

சென்ற "மகாமகத்"தின்போது காபிக்குப் பால் கிடைக்காமல் பால்டப்பிகளை வாங்கி உபயோகிக்க நேரிட்டதாம்.

உண்மை. அநேகர் தங்கள் உள்ளங்களில் அத்திருப் பிரசன்னத்தை உணர்ந்து மகிழ்வெய்துகிறார்கள். அவரது பிரசன்னம் வெளிப்படுவதற்குச் சாதகமாக பரிசுத்தமானதும் மிகத் தூய்மையானதுமாகிய அவயவங்கள் தேவை. அவருடைய அளவிலடங்கா அன்பை ருசிப்பதற்கு, மாசுமறுவற்ற களங்கமில்லாத ஜீவியம் அவசியம். மேலும், அவரது அருட்கிரியைகள் நடத்தப்படுவதற்கு, நமது இருதயங்களும், ஆத்மாக்களும் அத்யாவசியம். இவை யில்லாவிடில் அக்கிரியைகள் நடத்தப்படமாட்டா. கேவலம். அற்பராகிய நமது ஆன்மாக்களைக்கொண்டும் அதிமகத்தான காரியங்களை நடப்பிக்க அவர் வல்லவர். அவ்விதம் அவர் எடுத்து, அவரது நாம மகிமைக்காக உபயோகிக்குமாறு நம்மை முற்றிலும் அவரது பாதத்தில் அர்ப்பணஞ் செய்ய அச்சக்தியாகிய சூரியன் நம்மை எழுப்புவதாக.

S. J.



## நால்வகை சிரேஷ்ட குணங்கள்.

பகவானால் படைக்கப்பட்ட பிரதி மனுஷ்யனும், அந்த பகவானைப்போலவே நான்குவித சிரேஷ்ட குணங்களையும் பிதுரார்ஜித சம்பந்தத்தைப்போல் பெற்றிருக்கவேண்டும். எப்படியெனில், மானுஷிக ஜீவனானது :—(1) பாலியம், (2) பிள்ளைப்பருவம், (3) வாலிபம், (4) முதுமை-என்னும் பருவங்களிலிருந்து,

(1) உணர்ச்சி, (2) விசுவாசம், (3) நினைவு, (4) வலிமை, என்பவை தோன்றி, அவைகளிலிருந்து,

(1) விருப்பம், (2) ஆத்மா, (3) மனம், (4) சிந்தனை அல்லது துணிபு-என்பவை பிரபலமாகி, அவைகளிலிருந்து,

(1) அன்பு, (2) வணக்கம், (3) ஞானம், (4) சக்தி,— விருத்தியாகி, அவைகளிலிருந்து,

(1) நன்மை, (2) பரிசுத்தம், (3) சத்தியம், (4) நீதி— முதலானவை தோன்றி, அவற்றிலிருந்து,

(1) தர்மம், (2) ஈசுவரபக்தி, (3) ஞானம், (4) தருமம் —முதலான குணங்கள் உண்டாகி மனுஷ்யன் ஈசுவரனுடைய குமாரனாக பிதா புத்திர சம்பந்தத்தை யடையவேண்டும்.

# இராதையின் இரகசியம்.



பொழுது கடந்ததால் மரச்சோலைகள் இருண்டன. சந்திரனொளி ஆங்காங்கு மரங்களுக்கிடையே தோன்றிப் பிரகாசித்தது. எனக்கு முன் அடி எடுத்து வைக்க முடியவில்லை. களைப்பு அதிகரித்ததால் ஏதாவது ஒரு இடந்தேடி இரவு தங்கியிருந்து விடியற்காலையில் எழுந்து போய்விடலாமென்றெண்ணி அருகாமையில் ஏதேனும் வீடு இருக்குமோவென்று அடர்ந்த மரங்களும் செடிகொடிகளும் நிறைந்த அப்பிரதேச முற்றும் தேடினேன்; ஒன்றும் தென்படவில்லை. அதன்மேல் மிக்க கஷ்டத்தோடு மீண்டும் மெல்ல மெல்ல நடந்தேன். சிறிது தூரம் செல்லுமுன் யாரோ பேசும் சத்தம் என் காதில்விழ, எனக்கு மிகு திகில் உண்டாயிற்று. நான் இருந்ததோ ஜன நடமாட்ட மில்லாத இடம். கையிலோ கொஞ்சம் பொருள் இருந்தது. அதை இழப்பதென்பது வழிபோக்கனாகிய எனக்கு என் உயிரையே பறிகொடுப்பது போன்றதே. ஆகவே, நான் அச்சத்துடன் சுற்று முற்றும் நோக்கினேன். எவரும் தென்படவில்லை. ஆனால், மனிதக்குரல் மட்டும் வரவர தெளிவாய்க் கேட்டது. சில நிமிஷத்திற்கெல்லாம் யாரோ இருவர் நான் நின்ற இடத்தை நோக்கி வந்தனர். நான் அவர்களுக்குப் பெரிதும் அஞ்சி அருகே இருந்த குத்துச் செடிகளினிடையே புகுந்து மறைந்துகொண்டேன். மறு விநாடியில் அவர்கள் என்னருகே வந்து நின்றனர். அப்போது நான் அடைந்த திகிலும் கலக்கமும் கூறுந்தரத்தன்று. அவர்கள் அங்கேயே நின்ற இடத்தை விட்டுப் பெயராது பேச ஆரம்பித்தபோது தான் என் மூச்சும் சரியாய் வெளிவரத் தொடங்கியது.

ஃ

“அடி சுப்பீ! நான் உன்னைக் கண்டவுடனேயே நீ எவ்வித காரியத்தையும் சாதிக்கவல்லசமர்த்தியென்று என் மனதில் பட்டது. அது இப்பொழுது உண்மை யென்று தெரிகிறது. ஆனால்.........நீ மட்டும் இதைவெளியிடாது வைத்திருக்கவேண்டும்” என்றார் உயர்குடியில் பிறந்தவர் போல் தோன்றிய அம்மனிதர்.

“சாமீ! நீங்க கொஞ்சமும் அஞ்சவேண்டாமுங்க. என் கிட்டே சொன்ன ரெகஸியம் வெளியிலே வர்றதேயில்லிங்க. கடலுக்குள்ளறே கல் போட்டது போலதானுங்க” என்றாள் வயது முதிர்ந்த அப்பெண்பிள்ளை.

“அடி! அதுவே நான் விரும்புவது. ஒருபோதும் ராதையின் இரகசியம் வெளிவரலாகாது. ஜாக்ரதை! ஜாக்ரதை! நாம் செய்யப்போகும் காரியத்தை என் மகள் எந்த காரணத்தாலும் அறியலாகாது. இந்த என் தீர்மானத்திற்கு மாறாக ஏதாவது நடக்குமானால் நான் என்கத்தியால் உன்னை துண்டு துண்டாக வெட்டி நாய் நரிகளுக்கு இரையாக்குவேன்” என வற்புறுத்தி மொழிந்தார் அக்கனவான்.

---

கும்பகோணம் முற்றிலுமே திருக்கோயில்கள் சூழ்ந்துநிற்பதால் “மகாமக”த்திற்குச் செல்வோர் மகத்தான ஆநந்த மெய்துவாரென்பதுதிண்ணம்.

"சாமீ நான் குளந்தயா 'எனக்கு புத்திச் சொல்லறதுக்கு? இது எப்பெடிப்பட்ட ரெகஸியமுனு எனக்கா தெரியாமெ போகும்? இது வெளியிலே வந்தாச்சுனு ஒங்க ஸெநேகிதாளும் சனங்களும் ஒங்க அந்தஸ்த்து கவுரெவம் பெருமெ யெல்லாத்தையும் மதிக்காமெ ஒங்களெ அவமதிக்க மாட்டாங்களா?" என்ருள் சுப்பி யென்ற அக்கிழவி.

"ஆம்; ஆம். அச்சண்டாளி எனக்கு அகெளரவத்தை உண்டுபண்ணக்கூடிய காரியத்தைச் செய்துவிட்டாள். குடும்பத்திற்கும் பெற்ருேருக்கும் நன்மையையும் கீர்த்தியையும் தேடவேண்டியிருக்க, இந்த அவமானத்தைத் தேடிவைக்க துணிந்தனளே பாவி! எவ்வளவோ கற்றிருந்தும் இப்பேர்ப்பட்ட எண்ணம் அவள் மனதில் உதித்ததே ஈசா! இதை அறிந்தால் ஊர் சிரிக்குமே!" எனக்கூறிவிட்டு, "அடி ராதா! நீ எனடி எனக்குப் புதல்வியாகப் பிறந்தாய்? நீ பிறந்த அன்றே இறந்திருக்கக்கூடாதா?" எனக்கோபமும் துயரமும் கலந்த குரலில் ஆகாயத்தை நோக்கி பித்துப் பிடித்தவர்போல் பிதற்றினர் அம் மனிதர்.

"நீங்க சொல்றது சரிதானுங்க. அதை நான் கொண்டுபோய்ப் பாது காக்கிறேமுனு சொல்லிப்புடுறேனுங்க. ஒங்கமனஸிலே கவலெக் கிவலெ வைச்சுக்க வேண்டாமுங்க. இனிமேலே நடக்கப்போகிற காரியத்தை செய்யலாமுங்க" என்ருள் சுப்பி.

ஃ

உடனே இருவரும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டனர். அவர்களுக்குள் நிகழ்ந்த சம்பாஷணையை கவனித்தபோது அங்குஏதோ ஒருபெரிய காரியம் நடக்கப்போவதாக எனக்குத் தோன்றியது. என் மனதில் குடிகொண்டிருந்த அச்சம் ஒருவாறு நீங்கியதால் நமக்கு உதவிபுரிய கடவுளே இந்த நேரத்தில் ஆள் அனுப்பி வைத்தாரென மகிழ்ந்தேன். மேலும் சில நிமிடம் எப்படியாவது கஷ்டப்பட்டுக் கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்து சென்ருல் தங்க இடம்கிடைப்பதோடு அவர்களின் இரகசியத்தையும் அறியலாமென நினைத்தேன். உடனே செடி மறைவிலிருந்து வெளிப்பட்டு அவர்கள் பார்த்துவிடாதபடி வெகு தந்திரமாக அவர்கள் பின்னுல் மார்பால் நகர்ந்து சிறிதுதூரம் சென்றேன். அப்போது திடீரென இருண்ட மேகங்கள் சந்திரனைச்சுற்றி மறைத்ததால் எங்கும் இருள்சூழ்ந்தது. மரங்களும் காற்றினுல் அலக்கழிக்கப்பட, அவற்றின் இலைகள் சலசலத்தன. நான்இயற்கை யன்னையின் கருணையை வியந்து சற்று மூச்சுவிட நின்று, பிறகு என் முன்னுல் சென்ற அவர்களைப் பின்தொடர்ந்தேன். சின்னேரத்திற் கெல்லாம் சந்திரன் மேகத்தினின்று வெளியேறி முன்னிலும் பன்மடங்கு அதிகமாய்ப்பிரகாசிக்க, அவ்வெளிச்சத்தில் சற்று தூரத்திலிருந்த கட்டிடமொன்று நன்கு புலனுகியது. அம் மனிதரும் கிழவியும் அக்கட்டிட வாசலே யடைந்து கதவை மெல்லத்தட்டவே எவனே ஒருவன் வந்து கதவைத்திறந்தான். இருவரும் உட்புகுந்ததும்கதவு திடீரென மூடப்பட்டது.

ஃ

நான் அந்த வீட்டு வாசலில் சிறிதுநேரம் நின்று மேலே என்னசெய்வதென்று யோசித்தேன். என் மனதில் பலபல எண்ணங்கள் எழுந்து போராடின. ஊருக்குப் புறம்பே ஜனசூனியமாய், பயத்துக் குறைவிடமாய், ஒரே முடிவற்ற வெளியாய்த் தோன்றிய அப்பிரதேசத்தில் வசிக்கும் அவர்கள் எதற்கும் அஞ்சாத பாதகர்களாயிருக்

கக் கூடுமோ வென்ற ஐயம் என் மனதில் எழுந்தது. இந்த சந்தேகம், என் மனதைத் திடமாய்ப் பற்றிக்கொண்டதால் அவர்கள் தயவை நாடிச் செல்லு முன் அவர்களின் நடவடிக்கைகளைக் கவனித்தே தீரவேண்டுமென உறுதி செய்து கொண்டு, நின்ற இடத்தை விட்டு நீங்கி மெதுவாய் நடந்து அக் கட்டிடத்தை ஒரு சுற்றுச் சுற்றினேன். அப்போது அதன் பெரிய சாளரமொன்று திறந்திருப்பதும், வீட்டினுள் பிரகாசமான வெளிச்சம் நிரம்பியிருப்பதும் கண்டேன். உடனே உள்ளே நிகழும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை என் பிடரியைப் பிடித்துத் தள்ள, நான் சாளரத்தில் ஏறமுயன்றேன். அதுசற்று உயரத்தில் இருந்ததால் என் முயற்சிகளனைத்தும் வீணாயின. வேறு ஏதேனும் வழியிருக்கிறதாவென்று சுற்று முற்றும் நோக்கிய போது அச்சாளரத்தின் எதிரேசற்று தூரத்தில் இலைப்போர்வை போட்டுக் கொண்டு பருத்துயர்ந்து அடர்ந்து நின்ற ஒரு மரம் என் கண்களில் பட்டது. நான் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தவனாய் விரைந்து சென்று அம்மரத்தின்மேலேறி உட்கார்ந்து கொண்டு சாளரத்தின் வழியாய் வீட்டினுள் பார்வையைச் செலுத்தி அங்கு காணப்பட்ட விசேஷத்தை இரண்டொரு நிமிடங்களி லறிந்து கொண்டேன். ஆங்கு கிடந்த மஞ்சத்தில் விரித்திருந்த படுக்கையில் அழகிய நங்கையொருத்தி பல ஆண்டு நோய் வாய்ப் பட்டவள் போல் படுத்திருந்தனள். அவளுக்கு வயது சுமார் பதினெட்டு இருக்கக்கூடுமெனத் தோன்றியது. அவ்வேந்திழை ஏதோ கவலையால் கண்களினின்று நீர்த்துளிகளை மளமளவென உதிர்த்து பொருமிக் கொண்டிருந்தாள். அவளருகே நான் முன்கண்ட சுப்பி கிழவியும், ஆடையாபரணங்களணிந்து தெய்வமாது போல் பொலிவுற்று விளங்கிய மற்றொருபெண்மணியும் நின்றுகொண்டு ஆறுதல் கூறித் தேற்றிக்கொண்டிருந்தனர். அங்கு மற்றொரு பக்கம் கிடந்த ஆசனமொன்றில் கிழவியோடு சம்பாஷித்த மனிதர்கையில் ஒருகுழந்தையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அப்போது மஞ்சத்தில் படுத்திருந்த பொற்கொடி தன்உள்ளத்தில் எழுந்த துயரத்தை ஆற்ற இயலாதவள்போல் வாய்விட்டுப் புலம்ப, அம்மனிதர் ஆவேசங் கொண்டவர் போல் ஒரு துள்ளு துள்ளி யெழுந்து, "அடி அதிர்ஷ்டம் கெட்டவளே! வாயை மூடு!" என இடி இடித்தாற் போல் கர்ஜித்தவாறு கையில் இருந்த குழந்தையைக் கிழவியிடம் கொடுத்து அவள்காதில் ஏதோ சில வார்த்தைகளை மெல்ல மொழிய, அவள் அக்குழந்தையுடன் அவ்வறையை விட்டு நீங்கினள். உடனே மஞ்சத்தினருகே நின்றவண்ண மிருந்த பெண்மணி அங்கு பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்த விளக்கின் திரியைத்தாழ்த்த, விளக்கொளி மிகவும் குன்றியது. அம்மங்கிய ஒளியில் அறையினுள் இருந்தவர்களின் உருவங்கள் நன்கு புலனாகாமல் மூடுபனியால் சூழப் பட்டவைபோல் விளங்கின.

ஃ

---

முதலில் யுத்தம், முடிவில் வெற்றி. முதலில் வேலை, முடிவில் ஓய்வு. முதலில் எளிமை, முடிவில் வலிமை. முதலில் சந்தோஷம், முடிவில் துக்கம். முதலில் அலங்கோலம், முடிவில் இன்பம். முதலில் நேசம், கடைசியில் சத்துருத்துவம். முதலில் வீட்டின் ஓரமாய் நிற்க இடம் கேட்டல், முடிவில் அவ்வீட்டுக்காரனையே எதிர்த்துக்கொண்டு வெளியில் துரத்துதல்.

R. A. ஸ்வாமி நாயுடு.

சின்னோத்திற் கெல்லாம் அந் நங்கை ஹ்ருதயம் வெடித்துப் போகும் படியாகப் பிரலாபித்த சத்தம் கேட்டது. அத்துடன் வீட்டின் கதவு படீரெனதிறந்து மூடப்பட்ட ஓசை யெழும்பியது. மறுகணம் இருவர் அவ் வீட்டினின்றும் வெளியேறி நான் இருந்த திசைநோக்கி நடந்துவரலாயினர். அவர்கள் கிட்ட நெருங்கியதும் நான் நன்கு உற்று நோக்கி அவர்கள் இன்னார் என்பதை இனிதறிந்து கொண்டேன். அவர்கள் எனக்கு ஏற்கனவே அறிமுகமான கனவானும் கிழவியுமாக இருந்தனர். ஆனால், இப்பொது கிழவி கையில் பெரிய பெட்டி யொன்றை வைத்துக்கொண்டு இருக்கக்கண்டு வியந்தேன். அதனுள் என்ன இருக்கக் கூடுமென்று நான் எவ்வளவோ யோசனை செய்தும் என் மனதில் ஒன்றும் புலப்படவில்லை. இந்த நினைவின் இடையே அந்த மனிதரின் கண்டத்தொனி கேட்கப் பட்டது. அவர் கூறினார்:—"சுப்பீ ஜாக்கிரதை! ஜாக்கிரதை! பெட்டியைப் பலமாய்ப் பிடித்துக்கொள். காரியம் ஜல்தியாய் நடக்கட்டும்; தகுந்த வெகுமதி கிடைக்கும்......... ஆனால், இந்தக் குழந்தையின் செய்தி ராதைக்கு எட்டக்கூடாது"

"சாமி! இந்த தொளிலு இந்த ஏழைக்கு புதுசல்லங்க; இதற்கு முன்னமே இதெபோல எத்தெனையோ விதவைப் பொண்ணுக்கு மெத்த உதவி செஞ்சிருக்கிறேனுங்க" என்றாள் சுப்பீ.

ஃ

இவ்வார்த்தைகள் என் செவியிற் புகுந்து மூளையைத் தாக்கவே என் மனதில் எண்ணிறந்த எண்ணங்கள் எழுந்தெழுந்து மோதின. நான் ஒரு வகையான முடிவிற்கும் வரமாட்டாமல் சில நேரம் தத்தளித்துத் தடுமாறியவாறிருந்து, பிறகு திரும்பிப் பார்க்கையில் அவர்கள் இருவரும் என்னைக்கடந்து சிறிது தூரம் சென்றுவிட்டிருக்கக் கண்டேன். உடனே அவர்கள் மிகுந்த எச்சரிக்கையோடு எடுத்துச் செல்லும் பெட்டிக்குள் என்ன இருக்கிறதென்பதை நேரில் தெரிந்துகொள்ள விரும்பி பரபரப்புடன் மரத்தை விட்டிறங்கப் போகையில், திடீரென ஏதோ பளுவான பொருள் தண்ணீரில் தொபீரென விழுந்த ஓசையும், அத்துடன் குழந்தை யொன்று வீறிட்டலறிய பரிதாப சத்தமும் அவ்வமைதிக் கடலை அடியோடு கிளறிக் கடைந்து கொண்டு திரண்டெழுந்தன. என் உள்ளத்தில் தெளிவுண்டாயிற்று. நான் கண்டவற்றையும் கேட்டவற்றையும் ஒரு கோவைப்படுத்திப் பார்க்கவே ராதையின் இரகசியம் இன்னதென்பது நன்கு விளங்கியது.

ஃ

உண்மையைக் கண்டுகொள்ளவே என் உடல் நடுங்கியது. ஓர்வித பயங்கரமான குளிர் என் மனதைப் பற்றியது. என் உடம்பிலுள்ள இரத்தம் அப்படியே உறைந்து விடும் போல் தோன்றியது. நான் ஏற்கனவே நடந்து வந்த களைப்புடன் இந்த அச்சமும் கலக்கமும் சேரவே, மரக்கிளையைப் பற்றியிருந்த என்கை சோர்ந்துபோய் நழுவ, நான் 'ஐயோ!' எனக் கதறியவாறு கீழே விழுந்து "சிசுக்கொலை" என உரக்கக் கூவிய வண்ணம் கண்களைத் திறந்துப்

---

ஒரு ஆசிரியனுக்கு தான் எழுதிமுடித்த ஒரு பெரிய நூலின் சந்தோஷத்தைவிடத் தனது குழந்தை அன்றையதினம் ஒரு புது எழுத்தைக் கற்றுக்கொண்டதே அதிக சந்தோஷத்தைத் தரும்.

பார்க்க, என் மஞ்சத்தைத் தவிர பிறிதொன்றையும் கண்டேனில்லை. நான் கண்ட காட்சிகளனைத்தும் 'பொய்யாய், பழங்கதையாய், கனவாய்' மெல்லப் போயின.

ஃ

விதவா விவாகம் சாஸ்திர சம்மதமல்லவென மறுப்போருக்கு, இவ்விதமான பயங்கர சிசுஹத்திகளைச் செய்யமட்டும் சாஸ்திரம் இடந்தருகிறதா? ரகஸிய பாவங்களை ஊரார் அறியாவிட்டால் அது பாவமல்லபோலும்? இன்னோர் கடவுள் ஒருவருண்டு என்பதையே மறந்துவிடுகிறார்கள்!

த. சு. சங்கரலிங்கம்.

## எது சைவ ஒழுக்கம்?

நாம் திருநீறணிந்து உருத்திராட்சம் பூண்பதால் மட்டும் சைவர்களாகிவிடமாட்டோம். அவை வேண்டியனவே. அவற்றுடன் சமய ஒழுக்கங்களையும், நம் சமயப் பெரியார்கள நடந்து காட்டிய வழிகளையும் நாம் பின்பற்றல் வேண்டும். அல்லாவிடின் திருநீற்றாலும் உருத்திராட்சத்தாலும் ஏற்படும் பயன் என்ன? உயிர்களுக்கு அன்பு செய்து அவர்களை மேல்வழியில் நடக்கச் செய்வதே நம் அருமைச் சைவ சமயத்தின் ஒழுக்கமாகும். இதற்காகவே நம் சமயத் தலைவர்கள் பாடுபட்டனரென்பதை மறவாதீர்கள்.

—வித்வான் மறை திருநாவுக்கரசு.




## “மனோன்மணீய” ஆசிரியரின் வாக்கு.





காலஞ்சென்ற பேராசிரியரும், “மனோன்மணீயம்” என்ற நாடகத்தைப் புதுமையாய் இயற்றியவருமான திருவனந்தபுரம் ஸ்ரீமான் P. சுந்தரம் பிள்ளையவர்கள் M. A. ‘சாணக்கிய சூத்திரம்’ என்றநூலை இயற்றிய கோட்டாறு ஸாஹித்திய வித்துவான் கணபதி ஆசாரி யவர்களுக்கு வரைந்து விடுத்த கடிதம் :—

வந்தனம்! வந்தனம்! செந்தமிழ்ச் செல்வ!
சந்ததம் வாழ்கநும் நேயம், தயையா
விடுத்தநும் பத்திரம் அடுத்தநாள் நெறியே
சேர்ந்தும் இதுகால் நேர்ந்தபல் தடையால்
தரும்விடை தாழ்த்தலில் தமியேன் உள்ளம்
மிகுதுயர் அடையா நின்றது; மேனாள்
பிணியிலா உடலும் பீடையில் நெஞ்சும்
பெற்றிட நோற்றிலன்; குற்றமற் றஃதே.

நம்பெரும் புலமையும் நம்பெரும் உழைப்பும்
எங்கணும் பற்பலர் இயம்பக் கேட்டுளேன்
கடல்சூழ் புவிக்குக் கருதுநான் கெல்லையில்
இடம்பெறு தென்றிசைக் கெல்லையா யிருந்த
நமது நாட்டுக் குமரிக்கோடிபோல்
நீவிரும் தமிழ்க்கோர் நிலைபெறும் எல்லையே
ஆவீரென்ப; ஆயினும் குமரிக்
கோடியே (நீயிரோ) கோட்டமில் ஏகர்;

முன்னோர் புகழும் மும்முடிச் சோழ
நல்லூர் என்னும் நம்மூர் மான
முத்தமிழ்க் குரிய மும்முடி நமக்கே
ஒத்ததாம் என்ப; ஆயினும் நம்மூர்
குடபால் செல்லும் கோட்டாறுடைத்து. (நீரோ)

கிணபால் செல்லும் கோடா ஆற்றர்;
என்றிப்படியே பற்பலர் எங்கணும்
ஒன்றிய நம்புகழ் ஓதல் கேட் வேந்து

கண்டு பழகயான் காதலுற் றிருந்தும்
பண்டைய வினையால் நீரிவ ணடைந்தகால்
கலந்துரை யாடும் நலந்தரா தொழித்த
இடவேற் றுமையாற் படருழல் வேற்கு
சொற்சுவை பொருட்சுவை துளும்பி விம்மி

பற்பல புதிய கற்பனை யமைந்து
பத்தியின் நறுமணம் ஒத்துக் கமழநீர்
இயம்பிய காப்பியம் இரண்டையுங் கடைந்து
தெளித்தெடுத் தளித்துச் செவியொடு மனமுங்
களிப்புறச் செய்தநுங் கரையறு நேசம்
சந்ததம் தழைத்து வாழ்க ! தளரும்
செந்தமிழ்க் கொடிக்குச் செழுங்கொழு கொம்பாம்
நிந்தகைப் புலவோர் முந்துறு திவந்த

பெருங்குறை யெண்ணிப் பெதுரு வோர்க்கெலாம்
அருங்களிப் புதவும் அறைந்த நும் அழகார்
இருகா வியமும் பெருகா நிற்க
எழுதா வெழுத்தில் இயைவித் திடினே
இவ்வழிக் கென்னால் இயன்ற சிற்றுதவி
செய்வதிற் றடையிலை ; சிறக்கநும் உழைப்பே !

## பெரிய வீட்டுச் சோம்பேரிகளும் உழைப்பவர்களும்

பிறருடைய செலவில் முற்றும் கவலை யென்பதின்றி, பெருத்த சௌக்கியத்தில் இருப்பவர்கள் ஒருமாதிரியாகச் சோம்பேறிகளாகவே, எந்த சொல்லுக்கும் அலட்டிக்கொள்ளாமல் எல்லாருக்கும் தலையையாட்டிய மனிதர்களாய்த் தாளம்போட்டுச் சரி சரி யென்று தங்களுடைய காலத்தைத் தள்ளிவிடுகிறார்கள். செலவுக்குக் கையில் காசில்லாவிடினும் சகித்துப் பொழுதுபோக்கிவிடுகிறார்கள். ஆனால், தமது காலக்ஷேபத்துக்காக எப்போதும் ஓடியாடித்திரிந்து கஷ்டப்பட்டு ஸம்பாதிப்பவர்கள், அவர்களைப்போல் சோம்பேரிகளாகவோ, அடங்கிக் கிடப்போராகவோ சிறு சொல் கேட்டு சகிப்போராகவோ இருப்பதில்லை. அவர்களின் கையில் இரண்டு காசும் இருக்கிறது. அது செலவழிந்துவிடின் திரும்பவும் சம்பாதித்துக்கொள்ளலாமென்ற துணிவும் தைரியமும் இருக்கிறது. அதனால், அவர்கள் என்றும் சுறுசுறுப்புடையோராகவும், மானஸ்தராகவும், ரோஷக்காரராகவும் ஆகிறார்கள்.

# பெரியோர்களின் சரித்திர லாபம்.



பெரியோர் சரித்திரங்களாலாகும் பெரும்பயன், நம்மையும் அவ்வாறுன மாகதிமையான ஸ்தானத்திற்குக் கொண்டு செல்வதாம். அவரவரைக் குறித்தெழுதும் சரித்திர புஸ்தகங்களின் முக்கியமான நோக்கமாவது, ஒழுக்கத்திற்கு உத்தம உதாரணங்களாக விளங்கும் வரலாறுகள் திரளாய் அமைந்திருக்க வேண்டுமென்பதேயாம். மகிமை பெற்றவராகிய நமது முன்னோர்கள் இறந்து நெடுநாளாயினும், அவர்கள் நமது சரித்திர வடிவமாயும், அவர்கள் செய்த செய்கைகளின் வடிவமாயும் அழியாது இன்னும் நம்மோடுவாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் இன்னும் நமது அருகில் போஜனபந்தியில் உட்காருகிறார்கள்; நமது கையைப் பிடித்து நடத்திக் கொண்டு போகிறார்கள்; நாம் இன்னும் தெரிந்துகொள்ளாத பல சிறந்த விஷயங்கள் நமக்கு நன்றாய் விளங்கும்படி பிரயத்யக்ஷ உதாரணங்களும் அநேகம் நடத்திக் காட்டுகிறார்கள். உத்தம புருஷன் எவனெவனது சரித்திரம் எழுதியிருக்கின்றதோ அவனவன் தம் பின்னோர்க்கு என்றும் நலந்தரும் சாதனத்தைச் சொந்தமாய் எழுதிக் கொடுத்தோனாகிறான். எப்படியெனில், அவன் சரித்திரமானது என்றென்றைக்கும் பிறர் தம் ஒழுக்கத்திற்கு நல்லுருவமைய அனுசரிக்கத்தரும் அச்சாயிருக்கின்றது. அது மனிதருக்குள் ஒருவிதமான உற்சாகத்தை உண்டாக்கி, அவர்கள் உலக வியாபாரத்தை நூதனமாய்க் கைக்கொண்டு நல்லொழுக்கத்தில் ஒழுகுவதற்கு உதவுகின்றது. ஆகவே, உத்தம புருஷன் ஒருவனுடைய சரித்திர புஸ்தகமானது விலையுயர்ந்த வித்துகள் நிறைந்த பெட்டி போன்றது. மேலும், அது என்றும் அழியாத சப்தமாகி அனைவருக்கும் புத்தி கூர்மை உண்டாக்குகின்றது. "மில்தநன்" என்னும் கவிஞர் மொழிந்தபடி, அது இவ்வுலக வாழ்க்கைக்குப்பின் பேரின்ப வாழ்வு அடையும் பொருட்டுப் பத்திரப்படுத்தி க்ஷேமித்து வைத்திருக்கின்ற ஒரு பரயார்த்தமாம். இவ்வகைப் புஸ்தகங்கள் இடையறு தெப்பொழுதும் மனிதரை உயர்த்தி உத்தமபதம் அடைவிக்கும் பக்குவம் வருவித்துக்கொண்டிருக்கின்றது. ஆனால், யாவற்றிற்கும் மேலாய், இம்மையில் நம் ஒழுக்கத்திற்கு உரு அமையும்படி நமக்கு முன் வைத்திருப்பதும், அறிவு—இதயம் இவற்றின் தேவையனைத்திற்கும் மிகவும் எற்றதுமான உதாரணங்களடங்கிய புஸ்தக மொன்றுண்டு. அந்த உதாரணமாவது, சூரியனை ஒரு பொழுதும் கண்ணுற் காணமல்களுக்கண்டு, அவன் இருப்பிடம் எங்கென்று உத்தேசித்துத் தம்மால் இயன்ற மாத்திரம் சூரியனிடத்திற்கு எதிர்போய்ச் சேர எத்தனம் செய்யும் பூண்டு செடி கொடிகளைப் போல, நெடுந்தூரத்தில் நின்று கேள்வியாலும் வாசிப்பாலும் நாம் அனுசரித்து நடந்து, பின்னிட்டு அவற்றையே அனுபவ பூர்வமாய்க் காணத்தக்க தாகும்படி யிருப்பதாம்.

ஃ

சிறந்த மேதாவிகளுடைய சரித்திர புஸ்தகங்களை வாசிக்கும் வாலி-

பன் எவனும் அப்புஸ்தகங்களை முடித்து எழுந்திருக்கு முன்னமே. அதனால் தன் யுக்தியும் புத்தியும் திருந்தியதையும், தன் உத்தமமான எண்ணங்கள் பலப்பட்டதையும் உறுதியாய்க்கண்டு கொள்வான். இவ் வகையான சரித்திர புஸ்தகங்கள், மனிதர் எத்தன்மை யுடையோர் ஆக மாட்டுவாரென்றும், எவ்வளவு ஆற்ற லுடையோராக மாட்டுவாரென்றும், வாசிப்பவனுக்குத் திருஷ்டாந்த பூர்வ மாய்க் காட்டி அவன் ஆசைகளை அர ணுக்கிப் பூலோக விவகார நோக்கங் களை உயர்த்தி, நல் பலமே நனக்கு உதவும் எனும் மனவுறுதியை விருத்தி செய்யும். பேர்போன சித் ரீகராகிய மைகேல் அங்கிலோ என்பவருடைய செய்கைகளைச் சிந் தனை செய்த சமயத்தில் அவரது சரித்திரத்தை வாசித்த ஒருவர் தமக் குள்ளே புதிதான விவேகம் எழு வதை உள்ளுற அறிந்து "நானும் சித்திரம் எழுதும் சிற்பியானேன்" எனக் கூறியிருக்கிறார். சில சமயங் களில் வாலிபர்களும் தாம் வாசிக்கும் சரித்திர புஸ்தகங்களால் தமக்கு மிகத் திறமை உண்டாகக் காண் பார்கள். வலிமையாய்ப் பரவசப் படுத்துகிற சரித்திர புஸ்தகங்களு முண்டு. உத்தம புருஷராகிய ஒரு அதிகாரியின் சரித்திரத்தை வாசித்த ஒருவர் கூறுவதாவது :—"அந்தப் பிரபலமான அதிகாரி ஒழுகியதாக மேற்படி நூலில் மொழிந்த கௌரவ நெறி என் ஆவலையும் ஆசைப் பெருக் கத்தையும் மிகவும் எழுப்பிவிட்டு மகிமை அடைவதற்கு நூதன மார்க் கங்களை என் மனக்கண்ணுக்குத் திறந்து காட்டியது" என்று நவின் றிருக்கிறார்.

ஃ

ப்ராங்க்லின் என்ற பெரியார் தாம் நால்வருக்கும் உபகாரியாகத் தக்க நிலையும், உயர் பதவியும் பெற் றது "காட்டன் மாதர்" என்னும் வித்வான் எழுதிய ஒரு புஸ்தகத்தை இளமையில் வாசித்ததினாலேதான் என்று அடிக்கடி சொல்லி வருவார். காட்டன் மாதர் என்பவர் நின்ற நன் னெறியே அந்த நூலின் உற்பத்திக்கு மூலமாயிற்று. ஆ! நல்ல உதாரணங் களானது தற்காலத்தில் உள்ளவர் களை மாத்திரமே யன்றிப் பிற்காலத் துப் பிரஜைகளையும் சீர் திருத்தித் தன் வசப்படுத்தக் காத்திருக்கின்றது பாருங்கள். தமது ஒழுக்கத்திற்கும், முக்கியமாய்த் தொழிற்றுறைகளுக் கும் உரு அமைந்தது "பேன்ஜமின் ப்ராங்க்லின்" என்ற பெரியார் எழுதி வைத்திருக்கின்ற அச்சின்படி யென்று "ஸாம்யுயேல் நட்" என் பவர் உறுதிமொழி கூறுகிறார். ஆகவே, நல்ல சரித்திர உதாரணம் எட்டாத இடம் இன்னதென்றும், அதற்கு இவ்வளவு தானென்று ஒரு முடிவு உண்டெனில் அம்முடிவு இவ் விடத்திலென்றும் சொல்வது அசாத்தியமாம். ஆனதுபற்றியே, கல் வியினாலானாலும் சரி, ஒழுக்கத்தின லானாலும் சரி, நல்லினம் சேர்வதனா லும், நல்ல நூல்களை வாசிப்பதனா லும், அவைகளில் விளங்கும் உத்தம மான விஷயங்களைப் புத்தி பூர்வமாய் வியந்து அனுசரிப்பதனாலும் சிறந்த பயன் உண்டாகின்ற தென்பது நிச்

---

அவர் காட்டிய வழியில் தானும் எழுதலாம்; காரியம் செய்யலாம். ஆனால்; அவராகவே ஆகிவிட ஒருபோதும் முடியாது. அவர் அவர்தான்; பிறகு உள்ளவர் பிறகு உள்ளவரே. முதல் பதிப்பு எப்போதும் தங்கம்தான். அந்தப் பதிப்புக்கிணங்க அச்சிட்டது என்று பிந்தியுள்ளவர்கள் சொல்வது இரண்டாந்தரமான வார்த்தைதான். அது இரண்டாந்தரந்தான்.

சயம். "வித்தியாப்பியாச விஷயத்தில், முக்கியமாய் ஆதியில் எனக்கு அறிமுகமானவர்களால் ஆகிய நல்லினத்தைப் பிரான பதமென நம்பிச்சோ ஆசை கூர்ந்திருக்கிறேன். அவர்களோடு பின்னும் நெருங்கி நட்புகொள்ள நான் மிகவும் விரும்புகிறேன். ஒரு கால் வாசித்த புஸ்தகத்தை மறுகால் வாசிப்பது ஒரு வேளை மனதிற்கு இன்பந்தராதாயினும், முன் வாசித்திராத புஸ்தகத்தை வாசிப்பதை விட, எற்கெனவே வாசித்த புஸ்தகத்தையே மீளவும் பலகால் வாசிப்பது முன்பு அறிவுக்கெட்டாத புதியவற்றை உணருவதற்கு உதவியாய் மிகவும் நன்மை விளைவிக்கத் தக்கது என்றும் எண்ணுகிறேன்" என ஒரு பிரபல கிரந்த கர்த்தா கூறுகிருர்.

ஃ

ஒழுக்கத்திற்கு உத்தம உதாரணமாயுள்ள புஸ்தக மொன்றை யெடுத்துப் பொழுது போக்காய் மேலெழுந்தவாரியாக வாசித்தவர்களுக்கும் சில சமயங்களில் முன் உண்டெனக் கனவிலும் தோன்றாத மன வலிமைகள் அவ்வாசிப்பினுல் வெளிப்பட்டதாகத் தெரிய வருகின்றன. "அல்பியரி" என்பவர் "தாம் காதலோடும் கல்வி பயில நேர்ந்தது "ப்லுதார்க்கு" என்பவருடைய சரித்திர புஸ்தகத்தை வாசித்ததினுலேயே" என்று கூறியிருக்கிருர். இப்படியே ஒருவன் ராணுவ சேவகம் செய்து, காலில் படுகாயம் பட்டுக் கிடைப்பாடா யிருக்கையில், நோவை மறக்கடிக்கும்படி வாசிக்க ஒரு புஸ்தகம் கேட்டதற்கு, சிறந்த ஒரு சரித்திர புஸ்தகத்தைக் கொடுத்தார்கள். அவன் அதை வாங்கி வாசித்து அதனுல் அடங்காவாசை நெருப்பு மூண்டு ஜ்வலிக்க, அன்று தொட்டுத் தானும் அதிற் கூறியபடி நடக்கவேண்டிய முயற்சியை விரதமாய் அனுஷ்டித்து வரத் தீர்மானித்தான். இவ்வண்ணமே, அநேகர் பூர்வீகர்களுடைய நீதிநெறி நல்லொழுக்கங்கள் விளங்க எழுதிய சரித்திரங்களைப் படித்துத் தேர்ந்து மிகப பிரசித்தி பெற்று வாழ்ந்திருக்கிருர்கள். தம்மை மிகவும் தேற்றிப் பரவசப்படுத்திய புஸ்தகங்களைத் தினசரிதையிலும் கடிதங்களிலும் குறித்து வைப்பது ஒரு பிரபல சீமானின் வழக்கம்.

ஃ

பெருமையிற் சிறந்த சித்திர மெழுதுவோ ரொருவரைக் குறித்து எழுதிய வரலாறுகளை வாசித்தே தமக்கு முதலில் சித்திர வித்தையின் பேரில் ஆசை பிறந்ததென்று ஒருவர் சொன்னது போலவே, நாம் வாசிக்கும் புஸ்தகத்திற்குத் தகுந்தவாறு நமக்கு நூதன அறிவுகளும் புது யோசனைகளும் உண்டாகக் கூடும். சிறந்த தேசாபிமானிகளின் சரித்திரங்களை வாசிப்பவர்கள் தாங்களும் அவ்விதமே தேசாபிமானங் கொள்ள ஆசைத்தீ யுடையவராவதும் கூடும். ஆகவே, கீர்த்தியும் உயர்பதம் பெற வேண்டு மென்னும் அவாவு முள்ள ஒருவனுடைய சரித்திரம், அவனைப் போலும் கருவி கரணங்களும் முயற்

---

மாற்ருந்தாயின் பகை தன் தந்தை யிருந்தகாலத்தில் மட்டுமல்ல, தன் தந்தைக்குப் பிறகுங்கூட விரோதப்பட்டே யிருக்கும்; அவளுக்குப் பிறந்த குழந்தைகளை தங்கை, தம்பி முறைகொண்டு நாம் சேர்ந்துவாழ நினைப்பினும், அவர்கள் வேற்றுமைச் சிந்தைகளுடன் ஒதுங்கியே போவார்கள். ஒரு மித்திருக்கிற லக்ஷணம் அந்த மாற்ருந்தாய் மணப்பெண்ணுக வந்து புகுந்த முதல் வாரத்திலேயே தெரிந்துவிடும்.

சியுமுள்ள பிறர் நெஞ்சில் அவ்வாசைத் தீயைப் பற்றவைத்து ஜ்வலிப்பிக்கும். "முயற்சி யுடையோர் இகழ்ச்சி யடையார்" என்றபடி, முயற்சி செய்வோருக்கு அம்முயற்சியின் அளவுக்கேற்ற பெருமையும் பயனும் விளையுமென்பதற்கு ஐயமில்லை. ஒன்றைக் கண்டு வியப்புண்டாகும் போது, அதைப்போலத் தாமும் அனுசரிக்கவேண்டு மென்னும் அவாவும் அறிவும் உண்டாவதால், பெரியோர்களுடைய சரித்திரங்களைப் பார்க்கப் பார்க்க அனைவர்க்கும் அவற்றினிடத்தில் ஒரு புது உற்சாகமுண்டாக, அது காரணமாய் நன்னெறி நல்லொழுக்கங்கள் விடாமல் ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு தொடர்ந்துகொண்டு கால முள்ளளவும் நீடித்துக்கொண்டே யிருக்கும். தாம் ஆதியிற்கொண்ட ஒரே விதமான மனோ அபிப்பிராயத்தையே, இடையில் எத்தனை கஷ்டிகள் உண்டானபோதிலும் மாற்றாமல் ஆதி அபிப்பிராயத்தின்படியே கடைசிவரையிலும் நடந்துகொண்ட துணிவுடைய பெரியோர்களுடையவும், மேதாவிகளுடையவும் சரித்திரங்களை வாசிப்பவர்கள் அவர்களைப் போலவே என்றென்றும் ஒரே திடமான அபிப்பிராயங் கொண்டவர்களாய்த் தாம் பிடித்ததைச் சாதித்தே தீரும் தீரத்துவத்துடன் விளங்குவார்கள். ஆதலால், பெரியோர் சரித்திரங்களால் விளையும் பயன் மற்றெதனாலும் இல்லை.

"நல்லார் குணங்கள்
உரைப்பதுவும் நன்றே."

## படித்ததொன்று, புரிவதொன்று.

படித்த படிப்பை ஒரு மூலையில் சாய்த்து உறங்க வைத்துவிட்டு, அந்தப் படிப்பின் நீதி முறைகளுக்கு விரோதமாக நடந்துகொள்வதே அதிகமாயிருக்கிறது. பிறரது கஷ்டங்களைச் சிலர் உணர்வதேயில்லை. நண்பன் தன் சௌகரியக் குறைவுகளை எவ்வளவோ விவரித்தும், அந்த உட்குறிப்பைத் தெரிந்துகொள்ளாமல், அவனிடமே தங்கி, அல்லது தன்னவர்களை அவனிடம் தங்கச் செய்துவிட்டு, பிறகு அங்கு நேர்ந்த அசௌகரியக் குறைவுகளை ஒரு பெரிய தப்பிதமாக முறையிட்டு—அதற்காக மனஸ்தாபப் பட்டுக்கொள்கிறார்கள். இது அனாவசியமாக நேரும் சண்டை! நாளைக்குத் தன் வீட்டார் அனைவரும் வெளியூர் போக, தான் ஹோட்டலில் புசிக்கப்போவதாய் ஒருவன் சொல்லும் போது, பரவாயில்லை, நாங்களும் ஹோட்டலில் புசிக்கிறோம், சாப்பாட்டைப்பற்றிக் கவலையே இல்லை, தங்க இடமே வேண்டுமென்று சொல்லி, அவ்விதமே ஹோட்டலில் புசித்து வீட்டில் தங்கி, பிறகு சரிவரக் கவனிக்கவில்லை யென்று திட்டிவிட்டுப் புறப்படுகிறார்கள். இது வீண் சண்டை.

# கௌரவங்களின் விநோதம்.

"எங்க 'இட்டு' ரொம்ப சமுத்தாச்சே! அவன் அப்படி அந்த வேலே யெல்லாஞ் செய்யானே" என்று ஈன்றெடுத்த தாய், தன் துடுக்குள்ள பிள்ளையைப் பிறர் பழிக்கா வண்ணம் அவன் பக்கமாகப் பேசி அன்பினல் ஓர் கௌரவம் தருகிருள்.

2. 'மட்டிகள் மகா நாட்டில் தலைமை ஸ்தானம் வகிப்பதற்கு இவனைத்தவிர வேறு யாருமே கிடைக்கார்' என்கிருர், ஒரு பிதா. ஒரு சாதாரண பரீக்ஷையில் தேறிய தன் மகன் வேதமூர்த்தியைப்பற்றிப் பிறரிடம் தாமே, தற்பெருமைப் பேசப்படாதென்றும். அன்றிப் பிறர் அறிந்தால் கண்ணேறு படப்போகிற தென்றும் எண்ணி, வெளிக்குத் தாழ்த்திக் கூறி விட்டுத் தன் மனதிலே சிலாகித்தபடி ஓர் கௌரவம் தருகிருர்.

3. "வாருங்கள் எல்லப்பன் அவர்களே! எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று நேரங்கழித்து வரும் மாணுக்கனை ஆசான் அழைத்து, நன்முகப் புடைப்பதே, மாணுக்கனுக்கு ஆசான் தந்த கௌரவமாகும்.

4. கண்ணுல் கண்டதும் களிப்பெய்தி, கூடிக் குலாவுவதே உள்ளன் புள்ளோர் ஒருவருக்கொருவர் தரும் கௌரவமாகும்.

5. யாவரையும் சமமாகவும், ஏழை—பணக்காரன்—உயர்ந்தகுலம்—தாழ்ந்தகுலம்.—கற்ருர்—கல்லாதவர் என்று வித்தியாசம் பாராமல் உபசரிப்பதே உலகமறிந்த பெரியோர்களின் கௌரவமாகும்.

6 'நீங்கள் தான் அந்த வேலையைச் செய்கிறதுதானே; நீங்கள் விளக்கு துடைத்துவைக்கக்கூடாதா? நானென்ன சும்மாவா இருக்கிறேன்; இந்தப் பாழுங் கைக்குழந்தை என் பிராணனை வாங்கிவிடுகிறதே" என்று புருஷனேடு ஒரு அல்ப சங்கதிக்குப் பிரமாதமாய் எதிராடிப்பேசி நாலு வீடு சிரிப்பதே நங்கையரின் கௌரவமாம்.

7. 'உனக்கு அழுகிறது எல்லாம் தண்டப்படி. முன் ஜன்மாந்திரத்தில் பட்ட கடன். உனக்குப் போடுவதை வீதியில் போகும் நாய்க்குப் போட்டாலும் நன்றியுண்டு' என இரவு பகலாய்க் கஷ்டப்பட்டு உழைக்கும் வேலைக்காரர்களைத் திட்டி அவர்களுக்குக் கூலி தருவதே கிராமத்தாரின் கௌரவமாகும்.

8. "நான் இன்று.........செய்த சிரார்த்தம் காசியிலே, கங்கைக்கரையிலே, 108–திருப்பதியிலே, 1008–சிவாலிங்கத்திலே......... செய்தால் எந்தப் பலனுண்டோ அந்தப் பலன் இங்கே உண்டாவதாகவும். மேலும், என்னுல் கொடுக்கப்பட்ட பதார்த்த தக்ஷிணைகள் ஸ்வல்பமா யிருந்தாலும் அதிகமாக எண்ணி எடுத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லும்படிச் செய்து, பின், எடுத்துப்போய் மறைவில் 'அல்பாயுசு அரையணு கொடுத்தான்' என்று தூஷிப்பது பஞ்சாங்க அய்யரின் பாரம்பரிய கௌரவமாகும்.

9. நடந்து சென்ருல் கால்வலிக்குமென்று பஸ்வில் ஏறிப் பறந்து செல்

லும் பிரயாணிகள் 'பஸ்' 'புஸ்' என்று நின்று கெட்டுவிட்டால் அதைத் தள்ளுவது, நடந்து செல்லாமல் சென்றதின் கௌரவமாகும்.

10. குதிரைப் பந்தயத்தில் பணம் கட்டினால் பணக்காரனாய் விடலாம் என்று நம்பிப் பணம் கட்டியவர்கள் பணம் போனதும் 'உள்ளதும் போயிற்றே கொள்ளக்கண்ணு' என ஏங்கித் திரிவதுதான் பணக்காரப் பித்தின் கௌரவம்.

11. புது மணப்பெண்ணுடன் புது மணப்பிள்ளைப் பயிரங்கமாய்ப் பேசாதிருக்கும் கௌரவம் நிஷேகம் ஆகும் வரையில் தானும்!

12. இரெயில் வண்டியில் முன்னால் ஏறிப் படுத்துக் கொண்டவர்கள், பின்னால் வருபவர்களுக்கு இடந்தராமல், அவர்கள் எழுப்பினாலும் தூங்குபவர்கள்போல், பாசாங்கு செய்வது முன்னால் ஏறியதின் கௌரவம் போலும்!

13 "ஜநந்தரு" என்று சொல்லிக் கொண்டு, உலகுக்கு ஹிதோபதேசம் செய்யும், பெரியார் தன்னைப்போன்ற மனிதர்களே—அதிலும் மிக மிக எளியவர்களே தன்னைச் சுமந்துசெல்ல, தான் அவர்கள் மீது சவாரி செய்வது தான் "ஜநந்தரு" எனப்பட்டவர்களது பெரிய காருண்ணியத்தின் கௌரவமாம்.

14. குறித்தகாலங் கடந்து வருவதே தன் கடமையென ஒழுகிவரும் தாலூக்கா போர்டு தலைமை உபாத்திமார்கள், தப்பித்தவறி என்றாவது உதவி உபாத்தியாயர்கள் காலங் கடந்து வந்தால், அவர்களை, Why late? (என் தாமதம்) எனக்கேட்டு அதிகாரம் செய்வது தான் தலைமை ஸ்தானத்தின் கௌரவம் போலும்!

15. கைப்பொருளைப் பரஸ்திரீகளுக்குப் பரிந்தளித்து அவர்களிடமிருந்து பெற்றசரக்கால் அல்லலுறும் சமயம் கண்டவர்கள் ஏளனஞ் செய்வதுதான் அவர்கள் பணம் கொடுத்துப் பெற்ற கௌரவம்.

16 தாடகையை யொத்த நங்கையர், சொண்டவனைக் கண்டபடி ஏசி அவன் மனம் புண்ணாகும்படிச் செய்து, அதை வெளியில் சொல்லுவதை ஒரு கௌரவமாக மதிப்பர்.

17. பொங்கல் தினத்தன்று, பெரியோர்களின் பாதங்களில் பணிந்து அவர்களின் ஆசி பெறும் வழக்கம் நம் மூதாதையர் நமக்கு ஏற்படுத்தி வைத்துச்சென்ற அழியாக் கௌரவமாகும்.

18. ஒரு பெண்ணைக் கற்பழிக்க நினைக்கையிலும், தன்னை நம்பியவனை மோசம் செய்ய எண்ணுகையிலும் முதலில் கௌரவமான பதங்களையே கூறி உயர்த்திப் பேசி மயக்குவது வஞ்சகர்கள் உபயோகிக்கும் கௌரவமாம்.

19. 'எதை எழுதிக் கொடுத்தாலும் அதை நல்லதென்று ஊக்கங் கொடுத்து சந்தோஷப்படுத்துவதே ஆசிரியர் இராமாநுஜலு நாயுடுவின் ஸ்வபாவமென்று நகைச்சுவையுடன் "பிரஜாநுகூலன்" வெள்ளிவிழாவின்போது ஸ்ரீமான். ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் கூறியது' ஆசிரியர் இராமாநுஜலு நாயுடு அவர்களின் உண்மையான கௌரவமென்பதற்கு ஏதேனும் ஐயமுளதோ?

ஜமீன் எண்டத்தூர்—

D. இரத்தின முதலியார்.

---

புத்திமதியாவது, ஒரு புதிய படிப்பினையாவது இல்லாமல் ஒரு கதையை—நாவலை—நெடுக வளர்த்துச்சென்று எழுதுவதானது படிப்பவர்களின் மனத்தைக் கவராது. அவர்களுக்கு அது பயன்படவுமாட்டாது.

# வேலைக்கார ராமு.



"யாரப்பா அது?—எங்கே வந்தாய்?—என்ன வேண்டும்?" என்று தமது வீட்டு வாயிலில் வந்து நின்ற ஒருவனைப் பார்த்து வேணு முதலியார் கேட்டார்.

வந்தவன் :—ஸ்வாமி, நான் ஒரு ஏழை. படித்துக் கெட்டவன். எங்கும் வேலை கிடைக்கவில்லை. தங்களிடம் ஏதாவது வீட்டு வேலைகள் செய்து ஜீவிக்கலாமென்று வந்திருக்கிறேன். வயிற்றுக்கு இவ்வளவு சாதம் போட்டால் போதும். வேறு சம்பளம் வேண்டாம் என்றான்.

வேணு முதலியார் :—வேலை இப்பொழுது ஒன்றும் கிடையாது, உன் பெயர் என்ன?

வந்தவன் :—என் பெயர் ராமு. எவ்விதமேனும் என்னைச் சேர்த்து வைத்து இந்த சமயம் ஆதரிக்கவேண்டும்.

ஃ

முதலியார் ஒரு சுருட்டுக் கிடங்கை நடத்தி வந்தார். எவ்வளவு ஆட்களானாலும் அதற்குத் தேவையாயிருந்தது. ராமுவின் வசீகர முகம் அவர் மனத்தைக் கவர்ந்ததால் சுருட்டுக் கிடங்கில் சுருட்டு சுருட்டுகிற வேலையை ராமு பார்க்கும்படி ஏற்பாடு செய்தார். ராமு சுருட்டு வேலையை நன்கு கற்றுக்கொண்டு முதலியாரின் கணக்கு புஸ்தகங்களையும் அடிக்கடி பார்த்து வந்து, பிறகு கணக்குகளை யெல்லாம் எழுதும் வேலைக்கு மாற்றப்பட்டான். வெளி தேசங்களுக்கு சுருட்டுகளை ஏற்றுமதி செய்வதில் கண்ணைக் கவரும் விளம்பரங்களைத் தயாரித்து நானா இடங்களுக்கும் பரவச்செய்து வியாபாரத்தை முன்னிலும் அதிகமாக விருத்தி செய்தான். முதலியாருக்கு ராமுவின் பேரில் விசேஷித்த விருப்ப முண்டாயிற்று. ராமுவின் மீது முதலியாருடைய மனைவி மீனாக்ஷிக்கும், முதலியாரின் பெண் நீலாவுக்கும் அபிமானம் ஏற்பட்டது. அதிகமாக நெய்யை ஊற்றிச் சாதம் பரிமாறினர்.

ஃ

ராமு வந்து நான்கு மாதங்களாயின. நீலாவுக்கு விவாகத்திற்குப் பிரயத்தனங்கள் நடந்துகொண்டிருந்தன. பெண் பார்க்க வந்தவர்கள் நீலாவின் படிப்பை மிகவும் சிரத்தையாய்க் கேட்டனர். ஒரு பெண்ணால் தான் ஆடவனின் வாழ்க்கை யலங்கரிக்கப்படுவதும், அலங்கோலப் படுத்தப் படுவதும். நேர்வதால் விவாக விஷயத்தில் தங்களின் குமாரன் அதிக கவலையுள்ளவனாக இருப்பதாய்ப் பெண் கேட்க வந்தவர்கள் கூறினர். நல்ல சிவப்பைவிடப் படிப்பே முக்கிய மென்றனர்.

ஃ

ராமு அவர்களைப் பார்த்து உங்கள் குமாரருக்கு மூன்று மாதங்களுக்கு முன்பு வேறிடத்தில் பெண் பேசினீர்களே! நிச்சயதார்த்த தினத்தன்று எல்லோரும் வந்து சேர்ந்த பிறகு திடீரென்று விலகிக்கொண்டு போய்விட்டுப் பெண்வீட்டாரை அவமதித்து விட்டீர்களே. என் அம்

படிச் செய்தீர்கள் என்று வின வினன்.

ஃ

அதற்கு அவர்கள், நாங்கள் பெண் வீட்டாரின் வார்த்தைகளை முழுதும் நம்பி நிச்சயதார்த்தம் செய்ய ஒப்பினேம். ஆனல், பிறகு பெண்ணுக்கு வாய் அதிகமென்றும், பெண் வீட்டார் பிறகு சண்டையிடக் கூடியவர்களா யிருப்பார்களென்றும் தெரியவரவே, நிச்சயதார்த்தத்துக் குப் போகாமலே எங்களுக்கு இஷ்ட மில்லையென்று ஒரு ஆள்மூலம் தெரி வித்து விட்டு நின்றுவிட்டோம் என் றனர்.

“ அப்படியே இங்கும் செய் தால்? ” என்று ராமு திருப்பிக் கொண்டு கேட்டான்.

“ நாங்கள் இந்த வீட்டுப் பெண் ணைப்பற்றி இன்னும் ஒரு தீர்மான மும் செய்யவில்லை. எங்களுக்குப் பிடித்திருந்தால் நிச்சயதார்த்தம் இல்லாமலே விவாக நாள் இட்டுக் கொள்கிறேம் ” என்றனர்.

ஃ

பிறகு இரண்டு மூன்று தட வைகள் வந்து போயினர். கடைசி யில் பெண் தங்களுக்குப் பிடித்திருப் பதாயும், மாப்பிள்ளை அடுத்த வாரம் பட்டணத்திலிருந்து வந்து விடுவா னென்றும் தெரிவித்தனர். முதலி யார் ஒரு நல்ல தினம் பார்த்து இரவில் மாப்பிள்ளையைக் காணச் சென்ருர். மாப்பிள்ளை கருப்பாயினும் அலங்கார புருஷனுக இருந்தார். பெரிய தலைப்பாகையுடனும், அம ரிக்கா மூக்குக் கண்ணுடியுடனும் சராய் பூட்ஸு முதலிய நாகரீக ஆடைகளுடனும் காணப்பட்டார். எல்லாம் ஆங்கிலத்திலேயே பேசி ஞர். முதலியாரின் மனதுக்கு மிக வும் பிடித்துப்போயிற்று. சந்தோ ஷத்துடனும் வீட்டிற்கு வந்து நீலா விடத்தில் மாப்பிள்ளையைப்பற்றி விசேஷமாகச் சிறப்பித்து வர்ணித் தார்.

ஃ

நீலாவின் மனதிற்கு மாப்பிள்ளை யின் வர்ணனை பிடிக்கவில்லை. அந்த ஆங்கில முக்குக்கண் டம்பாச்சாரி தனது சாந்த குணங்களுக்குத் தக்க வராயிருப்பது கஷ்டம் என்று கூறி ஞள். இதற்குள் ராமு “ அந்த இங்கி லீஷ் முட்டாள் வேண்டாம் ” என்று கூவினன். “ முட்டாள் ” என்று ராமு கூறியதில் முதலியாருக்குக் கோபம பிறந்தது. “ ஒரு வேலையாள் எவ்வளவு பேசவேண்டுமோ அவ் வளவு பேசு” என்று ராமுவைக் கண்டித்தார். நீலாவுக்கோ ராமு கூறியதே சரி யென்று மனதில் பட் டது. ‘எனக்கு அந்த இடம் மிகவும் பிடித்துப்போய் விட்டது. புலாவ் கிச் சடி விருந்து நடத்தினர்கள். கனத்த உபசாரங்கள் செய்தார்கள் ” என்று முதலியார் கூறி நீலாவைச் சம்மதிக் கும்படி வற்புறுத்தினர். அவள் தாயாரும் “ அப்பாவின் வார்த்தை யைக் கேளம்மா ” என்று கட்டாயப் படுத்தினள். புலாவ் கிச்சடிக்காகவா ஒரு பெண்ணைப் பலிதருகிறது என் ருள் நீலா.

ஃ

தனக்கு சம்மத மில்லாமலே விவாகத்திற்கு நீலா ஒப்புக்கொண்

---

தன் பசி தீர்த்துக்கொள்வதற்குமுன் தன் கீழ் வேலை செய்வோரின் பசியை நிவர்த்திக்க வழி தேடிவைக்கவேண்டும். அவர்களும் உண்ணத் தானும் உண்ணுதல் ஒரு மகத்தான ஆநந்தம். அது கடவுளுக்குப் பிரீதி.

டான். நிச்சயார்த்தமும் ஆயிற்று. ராமு அந்த விவாகத்திற்குதான் வரப் போவதில்லை யென்று தெரிவிக்கவே, முதலியார் கடுஞ்சினத்துடன் வேலையை விட்டுப்போ என்று தள்ளி விட்டார். ராமு வீட்டுடன் இருக் கட்டுமென்று நீலாவும், அவள் தாயும் எவ்வளவோ வேண்டியும் கடுங்கோப வேணு முதலியார் ஒப்பவில்லை.

ஃ

விவாக தினமும் வந்தது. ராமு விவாகத்திற்குத் தங்களோடு இல்லா தது நீலாவுக்கும் மீனாக்ஷிக்கும் அதிக வருத்தமே. மீனாக்ஷி அவன் வயிறு குளிர செய்யும், ஆடைத் தயிருமாய் அன்னமிட்டுப் பழகிப்போய் விட்டபடியால், தான் புசிக்கும்போ தெல்லாம் ராமுவை நினைத்துக் கொண்டு வருந்தினாள் நீலாவுக்கோ தன் பக்கமாகப் பேசிய ராமு வீட்டை விட்டுப்போய் விட்டதில் அவளுடைய விவாக சந்தோஷம் குறைந்து போயிற்று. மேலும், தான் வேண்டாமென்று மறுத்த இடத்தி லேயே தன் கழுத்தைக் கொடுக்கும் படியாயிற்றே என்று கண்ணீர் விட் டாள்.

ஃ

விவாக முகூர்த்தத்தன்று மாப் பிள்ளை பெரிய மூக்குக் கண்ணாடியு டனும், பெரிய தலைப்பாகையுடனும், செராய் நிஜார் சிங்காரங்களுடனும் வந்து குந்தி நலுங்கிட்டுக்கொண்டார். மாப்பிள்ளை கருத்திருந்தார். மூக்குக் கண்ணாடி யணிந்ததில் முகமே தெரியவில்லை. போதாக் குறைக்குத் தலைப்பாகை வேறே தடபுடல் செய் தது. மாப்பிள்ளையின் கால்களே வெளிக்குத் தெரியவில்லை. எல்லாம் நாகரீக மோஸ்தர் ! ஸமஸ்கிருதத்தில் சொல்லாமல் இங்கிலீஷில் சுலோகங் களைச் சொல்ல கூடாதா என்று மாப் பிள்ளை புரோகிதரைக் கேட்டார்.

ஃ

பெண்ணை நலுங்குக்கு அழைத்து வந்தபொழுது, சிவந்த வதனத்துடன் அழகாய் விளங்கும் ராமு அங்கு வந்து விட்டான். நீலா அவனைக் கண்டு மகிழ்ந்தாள். அங்கும் அவன் "மாப்பிள்ளை இங்கிலீஷ் மூட் டாள்" என்று கூவினான். இப் போது தமது வேலையாளல்லாததால் வேணு முதலியார் ராமுவைக் கண் டிக்க முடியவில்லை. எல்லாம் சம் பளம் கொடுத்தால் தானே அதி காரம் செய்யலாம் !

ஃ

மாங்கல்ய தாரண சமயத்தில் மாப்பிள்ளையைத் திடீரென்று காண வில்லை. எங்கு தேடியும் அகப்பட வில்லை கடைசியில் ராமுவே அந்த மூக்குக்கண்ணாடி மாப்பிள்ளை யென் றும், அவன் தன் முகத்தையும் கால் கைகள் முதலியவற்றையும் கருப் பாக்கிக் கொண்டிருந்தானென்றும், நல்ல மனைவியைத் தெரிந்தெடுப் பதற்கே, விவாகத்துக்குமுன் பெண் ணின் குணங்களை அறிய விரும்பி ஒரு வேலையாளாகப் பெண் வீட்டி லிருந்து யாவும் கண்டு திருப்தியான பிறகு விவாகத்திற்கு சம்மதித்தா னென்றும் தெரிந்தது. முதலியார் பிரமித்தார். நீலாவின் ஆநந்தத்திற் குக் கேட்பானேன்? நீலாவுக்கும் ராமுவுக்கும் விவாகம் மங்களமாய் நிறைவேற்றிற்று.

---

பிரயாணம் நிச்சயந்தானும். ஆனால் இன்னும் புறப்படுவதற்கு நாள் குறிக்கவில்லையாம். கல்யாணம் உறுதிதானும். ஆனல்; பெண் இன்னும் தீர்மானமாகவில்லையாம்.

# குழந்தைகள் பக்கம்

## உலக முழுவதும் ஒரு குடும்பம்.





நமது குடும்பமானது தாய் தந்தை, அண்ணன் தம்பி, அக்காள் தங்கை முதலிய சொற்ப மனிதரோடு மாத்திரமே முடிவு பெறுவதில்லை. இவ்வுலகத்திலுள்ள மனித ஜாதியார் எல்லோரும் ஒன்றாய் அடங்கிய ஒரு பெரும் குடும்பமாயிருக்கின்றது.

2. நம்முள் அநேகர்க்குச் சமீபத்திலேயே உறவினர்களும், நேசர்களும், அண்டை அயல் வீட்டுக்காரர்களுமாய்ப் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்கும் நமக்கும் எவ்வளவோ போக்குவரத்துகள் விசேஷித்திருக்கின்றன. நம்முடைய சுகதுக்கங்களைப்போலவே அவர்களுடைய சுகதுக்கங்களுக்கும் நாம் அதிகமாக கவனம் வைக்கிறோம். நமக்கு வேண்டியவர்கள் அநேகர் நம்மைவிட்டுப் பிரிந்து நெடுந்தூரத்திலே வசித்துக்கொண்டிருக்கின்றனர். ஆயினும், அவர்களுடைய மனதுமட்டும் எப்போதும் நம்மை நெருங்கியே இருக்கின்றது. அவர்களிடத்தினின்றும் அடிக்கடி நமக்கு யோக க்ஷேமங்களை விளக்கும் கடிதங்கள் வந்துகொண்டேயிருக்கின்றன. இவ்வண்ணம், நாம் பிறந்த ஊரைவிட்டு அப்புறம் போகாமல் வீட்டிலேயே வசித்துக்கொண்டிருந்தாலும், நாம் ஒருபோதும் காணாத தேசங்களில் வசிப்பவர்களோடு நமது மனது மாத்திரம் நெருங்கி நேசங்கொண்டிருக்கின்றது. அநேகம் காததூரம் ஒதுங்கியிருந்தாலும் அவர்களிடம் நமது மனம் ஓடுவதை அந்தத்தூரம் ஒருபோதும் விலக்கமாட்டாது. அவர்களிடத்தில் அன்பு கூர்வதையும் அகற்றமாட்டாது.

3. இவ்வுலக வாழ்வு எப்படியிருக்கிறது? இப்பூமண்டலத்தில் ஒரு புறத்திலுள்ள ஜனங்கள் மற்றொரு புறத்திலுள்ள ஜனங்களைப்பற்றி நினைக்கும்படியும், அவர்களால் லாபம் அடையும்படியும், தாங்கள் அடையவேண்டிய லாபத்துக்காகக் கைத்தொழில், விவ

---

தன்னை இருக்கும்படி வற்புறுத்திச் சொல்லவேண்டியவர்களே, எப்போது ஊருக்குப் போகிறாய் என்று கேட்க ஆரம்பித்துவிடுவதாகில், பிறகு அங்கு இருக்கவே மனம் பிடிக்காது.

சாயம் முதலியவைகளைச் செய்து உழைக்கும்படியும் இருக்கிறது. உலகத்தில் சுகமாயிருந்து பிழைத்து வாழவேண்டுமென்கிற எண்ணமானது வருந்தி உழைக்கும்படி ஒவ்வொருவரையும் தூண்டிவிடுகின்றது.

4. முதலில் நமக்கு உணவு எப்படிக் கிடைக்கிறது? நமது வீட்டில் சமையல் செய்வதற்குமுன் திரளான ஜனங்கள் அந்த சமையலுக்கான சாமான்களுக்காக உழைத்துப் பாடுபட்டிருக்கவேண்டும். உழுது பயிரிட்டால்தான் சமையலுக்குத் தானியம் கிடைக்கும். கலப்பை முதலிய உழு கருவிகளெல்லாம் அநேக கம்மாளர்கள் கூடிக் கைத்தொழில் செய்து சித்தப்படுத்தவேண்டும். அந்த உழு கருவிகளுக்கு வேண்டிய இரும்பு எங்கிருந்து கிடைத்தது? பல்லாயிரம் ஜனங்கள் இருப்புச் சுரங்கங்களில் வேலை செய்து வெட்டி எடுக்கிறார்கள். இன்னும் இதரமான கருவிகளையும் அநேகர் செய்து கொடுக்கிறார்கள். சமைப்பதற்கு வேண்டிய பாண்டங்களெல்லாம் குயவனால் செய்யப்படுகின்றன. அடுப்பு எரிப்பதற்கு வேண்டிய கட்டை முதலியவைகளை அநேகர் வெட்டிக்கொண்டு வருகிறார்கள். இவ்வண்ணம் உணவு நமது கைக்கு எட்டி, வாய்க்கு எட்ட, எண்ணிறந்த விதமான எத்தனையோ வேலைக்காரர்கள் தமது புத்தியினாலும் கையினாலும் பாடுபடவேண்டி யிருக்கிறது.

5. நமக்கு உணவு கிடைப்பதற்காக இத்தனை வருத்தமேன்? நாமே பாடுபட்டுப் பயிரிட்டுப் புசிக்கக்கூடாதாவென்று கேட்பீர்களோ? எல்லாப் பிரயாசைகளையும் வேலைகளையும் ஒருவனே பட்டுச் செய்துகொண்டு ஜீவனம் தேடுவது ஒருபோதும் எளிதில் முடியாது. ஒருவருக்கொருவர் ஒத்தாசையாகத் தலைக்கொரு தொழிலாய்ப் பாகித்துக்கொண்டு, பலஜாதி ஜனங்களும் கூட்டாகப் பாடுபட்டு வருவதனால்தான், ஜீவனம் எல்லோருக்கும் கூடியவரையில் சுலபமாய்க் கிடைக்கின்றது.

6. நாம் ஜீவிப்பதற்கு முக்கியாதாரமான தானியவகைகள் என்பவை மாத்திரமேயல்ல; அதற்கு இன்றியமையாத் துணையான உப்பு பயிரிட்டு வருவதற்கு எத்தனைபேர் உழைக்கவேண்டும்? சர்க்கரை சேர்த்துக்கொண்டு எந்தப் பதார்த்தத்தையும் இனிப்பாய்ப் புசிக்கிறோமே. அதற்கு முதலில் கரும்பு நட்டுப் பயிராக்கி, ஆலையாடிச் சர்க்கரை காய்ச்சி யெடுக்க எத்தனைபேர் எவ்வளவு காலம் வருந்தவேண்டும்? நமக்கு ஆடைகள் கிடைப்பதும் இப்படியே. பருத்தி பயிரிட்டுப் பஞ்செடுத்துப் பதப்படுத்தி நூல் நூற்று ஆடைகள் நெய்யவேண்டும். இவற்றுள் அநேக சாமான்கள் தேசாந்தரங்களில் உற்பத்தியாகின்றன. அவற்றைத் தரைவழியாயும் கடல் வழியாயும் நமது தேசத்துக்குக் கொண்டுவருவதற்காக எவ்வளவோ கோடிக்கணக்கான ஜனங்கள் உழைக்கிறார்கள். அந்த உழைப்பின்

மூலமாக அவர்கள் பெறுகிற லாபத்தில் உணவு தேடிக்கொள்கிறார்கள்.

7. நன்மையாயினும் தீமையாயினும் ஓரிடத்தில் செய்யப்படுமானால், அது மற்ற இடங்களிலும் நன்மையையோ தீமையையோ உண்டாக்கும். உபயோகமான ஒரு விஷயம் ஓரிடத்தில் புதிதாய்க் கண்டு பிடிக்கப்படுமாயின், அது தேச முழுமைக்கும் பரவி நன்மையுண்டாக்குகின்றது. நல்லோன் ஒருவன் செய்யும் நற்செய்கை நெடுந்தூரத்திலுள்ள தேசங்களிலும் உணரப்படுகின்றது. ஆகவே, ஜனங்கள் ஒருவருக்கொருவர் நேசமும் நம்பிக்கையும் கொண்டவர்களாய் இருந்தால்தான், ஒருவர்க்கொருவர் உதவிக்கொண்டு வாழ முடியும்.

8. இதனால் நாம் அறியவேண்டியதென்ன? நம்முடைய குடும்பமானது உற்றாருறவினரும் நேசர்களுமாகிய சில மனிதர்கள் மாத்திரமே அடங்கியதல்ல; உலகத்திலுள்ள மனித ஜாதியார் அனைவரும் அடங்கப்பெற்ற மிகப் பெரிய குடும்பமாம் என்பது இதனால் தெளிவாகின்றதல்லவா? ஆதலால், நாம் செய்யவேண்டிய கடமைகளை உலகமுழுதுக்கும் உபகாரமாயிருக்கும்வாறாக எப்போதும் தவறாது செய்துவரக்கடவோம்.

## நிர்வாக ஜோதி.

நிர்வாகத்துவ சக்தியும், அனைவருக்கும் பிரீதியாய் நடந்துகொண்டு யாவரையும் சேர்த்துவைத்து வாழும் திறமையும், சகிப்புக் குணமும் தயாள சிந்தையும் படைத்த ஸ்திரீ புருஷர்களான நாயகமணிகள் அந்தந்தக் குடும்பங்களில் ஒருவித ஜோதிப்பிரகாசமாய் விளங்குகிறார்கள். அவர்கள் இருக்கும்வரையில் அந்த வீட்டிற்குப் பலர் வரவும் போகவும் தங்கியிருக்கவும் ஆதரிக்கப்பெறவும் கூடுமானதாகிறது. அந்த வீடும் ஓங்கி லக்ஷ்மீகரமாய் இலங்குகின்றது. அவர்கள் கால் மடைந்துவிடினே அந்த வீட்டின் அதிகார அமுல்களும் நிர்வாகமும் அடியோடு மாறுதலடைந்து வெகு சிக்கனமும், அதற்கேற்ற தரித்திரமுமாகிவிடுகிறது. இறந்துபோனவர்களோடு அந்த வீட்டின் தர்மப் பெயரும் ஜோதியும் போய்விடுகிறது.

பத்திராசிரியர்களை நாள்தோறும் சந்திப்பதென்பது கூடாது. அதனால் அவர்களின் அவசர வேலைகள் பலவும் தவறிவிடக்கூடும்.

# மீன்களின் விசித்திர வாழ்க்கை.



நீந்துவதென்றாலும், மிதப்பதென்றாலும் அமிழ்ந்து போகாமல் தண்ணீரில் தங்கியிருப்பதெனப் பொருளாகும். ஆயினும், நீந்துவதென்பது உயிருள்ளவைகளுக்கும், மிதப்பதென்பது உயிரில்லாதவைகளுக்குமே வழங்குகின்றன. மனிதன் நீந்துகிறான், கட்டை மிதக்கின்றது என்று சொல்லுகிறோமே யொழிய, மனிதன் மிதக்கிறான் என்றாவது, கட்டை நீந்துகிறதென்றாவது ஒரு போதும் சொல்வதில்லை. ஆனால், ஒருவன் குளத்தில் விழுந்து இறந்து போய் வெளித்தோன்றினால், அப்போது பிணம் மிதக்கிறதென்று சொல்வோமே யொழியப் பிணம் நீந்துகிறதென்று சொல்வதில்லை. ஆதலால், மிதப்பதென்றால், கட்டை மரம் முதலியன தன்னுடைய முயற்சி எவ்வளவுமின்றி அமிழ்ந்து போகாமல் தண்ணீரின்மேல் விழுந்து கிடப்பதாம். நீந்துவது அப்படிப் பட்டதன்று; தன் சொந்த முயற்சியால் தண்ணீரில் மூழ்கிப்போகாதபடி தன்னைத்தான் காத்துக்கொண்டு அதன்மேல் ஸஞ்சரித்து விளையாடுவதாம். இந்தக் கருத்து ஜீவவர்க்கங்களுக்கேயன்றி ஸ்தாவரங்களுக்குப் பொருந்தாவாதலால், தண்ணீரில் தெப்பம் மிதந்து ஓடுகின்றதென்ன வேண்டுமே யொழிய, தெப்பம் நீந்துகிறதென்று ஒருபோதும் சொல்லலாகாது. மேலும், தெப்பம் தண்ணீரில் அசைந்தோடுவது அதன் செயலாலல்ல; தண்ணீரோட்டம், காற்றுவாட்டம் இவைகளாலேயாம். மனிதன் நீந்துவதோ அப்படிப்பட்டதன்று; தண்ணீர் செய்கின்ற சகாயத்தோடுகூட, அவனுடைய சொந்த முயற்சியும் அதிகமாய்ச் சேர்வதனாலே தானாகின்றது.

ஃ

இப்போது நீந்துவதைப் பற்றிச் சற்று விசாரிப்போம். நீந்துவதில் இரண்டு விதமுண்டு. மனிதர், மிருகம் முதலியன நீந்துவது ஒரு விதம். மீன் முதலிய நீர் வாழ்வன நீந்துவது ஒருவிதம். மனிதர்கள் நீந்தும்போது அவர்கள் உடலை நீர் பாதி தாங்கிக் கொள்கிறது; மற்றப் பாதி அவர்களுடைய சொந்த முயற்சியால் ஆகின்றது. மேலும், அவர்கள் வெளிக்காற்றை உட்கொண்டு மூச்சுவிட்டு ஜீவிக்கின்றவர்களாதலால், நீந்தும்போதும் காற்றை உட்கொள்வதற்குச் சிறிதும் தடை நேரிடாமலிருக்கும் பொருட்டு அவர்கள் கழுத்தளவு அல்லது கடைசியாய் நாசியை மாத்திரமாவது தண்ணீருக்குமேல் வைத்துக்கொண்டே நீந்துகின்றனர். நாய், குதிரை முதலிய மிருகங்களும் பறவைகளும் இப்படியேதான் நீந்துகின்றன. இவர்களெல்லாம் தமது கை அல்லது கால்களுடைய உதவியால் தண்ணீரில் தாம் அமிழ்ந்து போகாதபடி முதலில் தம்மைக் காத்துக் கொண்டு அவற்றின் உதவியாலேயே நீரைத் தள்ளிக் கொண்டு இங்குமங்கும் தண்ணீரில் ஸஞ்சரிக்கின்றனர். நீரிலே பகையுள்ளவைகளான பூனை முயல் முதலிய சில நாற்கால் ஜந்துக்கள் கூட இரை தேடுவதற்காகத் தண்ணீரில் இறங்கி இரையைப் பிடித்துக் கொண்ட

வுடனே அதிதுரிதமாய் நீந்திக் கரையேறி ஓடிப்போகின்றன.

ஃ

மீன்களோ இப்படிப்பட்டவைகளல்ல. தண்ணீரே அவைகட்கு நிலையான இருப்பிடம். காற்றுப்பைபோன்ற ஒருவகைப் பை அவைகளின் உடலில் அமைந்திருப்பதால் தண்ணீரில்அமிழ்ந்து போகின்ற பயம் அவைகட்கு ஒருபோதுமில்லை; அப்பைகளின் உதவியால் அவை எளிதில் ஜலத்தின் மேலெழவும் கீழிறங்கவும்கூடும். கீழ இறங்கவேண்டுமானால் அப்பையை அழுத்தும்; மேலே எழவேண்டுமானால் அதைக் கதிக்கச் செய்யும். ஆதலால், அவை மேற்சொல்லியவைகளைப் போலத் தண்ணீரின் மேல் மிதப்பது மில்லை, நீந்துவது மில்லை; பின்னென்னவெனில், சுற்றுபுறமும் தண்ணீரால் சூழப்பட்டு அதற்குள்ளே வாசம் செய்கின்றன. இவ்வண்ணமே, யதேச்சையாகத் தண்ணீரில் குடிகொண்டு ஸஞ்சரிக்கின்ற நீர்வாழ் ஜந்துக்கள் அநேகமாயிரம் இருக்கின்றன. அவற்றுள் கடல்களிலும் தட்டுத்தடையின்றித் திரியும் திறமை யுடையவைகள் அநேகமுண்டு. ஆனாலும், மீன்களைப் போல அத்தனை துரிதமாகத் தண்ணீரில் ஓடத்தக்க திறமையுடைய நீர்வாழ்ஜந்து மற்றொன்று மில்லை.

ஃ

மிகப்பயங்கரமாய் அலையடித்துக் கோஷிக்கின்ற கடற் கரைகளுக்கு ஸமீபத்திலாகட்டும், கடல் நீர் அசைவற்றிருக்கின்ற அகாதமான அடிப்புறங்களிலாகட்டும், நீர் ஸ்தம்பித்திருக்கின்ற ஏரி, தடாகம் முதலிய நீர்த்தாக்குகளிலாகட்டும், அதிகவேகமாகத் தாக்கி விழுகின்ற மலையருவிகளிலாகட்டும், எங்கெங்கே தண்ணீர் இருக்கின்றதோ அங்கெல்லாம் மீன் குடிகொண்டிருக்கக் காண்போம். ஆதலால், இவ்வற்புதமான ஜந்துக்கள் அதிக சாதாரணமாக நீரில்ஓடுவதற்கு ஏற்றதான அவற்றின் உருவமைப்பை ஒருவாறு இங்கு விசாரிப்போம்.

ஃ

வெகுவாய் எல்லாமீன்களுடைய உடலும் மெல்லியதாய் உருண்டு அதிக வேகமாய்த் தண்ணீரைப் பிளந்து கொண்டு போவதற்கு ஏற்ற வண்ணமாக அமைக்கப் பட்டிருக்கின்றது. அவைகட்கு பாதங்களில்லை. மீன்களுடைய உடல் தலைப்புறம் பருத்து, வாற்புறம் குறுகி யிருப்பதால் அது பார்வைக்கு ஒரு ஆப்புப்போல் இருக்கின்றது. அதிக வேகமாக நீந்த வேண்டுமென்று எண்ணங் கொண்ட மீன்களுக்குத் தேகம் இப்படி ஆப்பு வடிவமாயிருப்பது மிகவும் அனுகூலமாகின்றது. எப்படியெனில், ஒரு பெரிய மாப்பிளப்பில் ஆழ்ந்து அடித்த ஆப்பின் கூரிய முனையில் வழவழப்பானபொருள் ஏதாவது தடவப்பட்டிருக்குமாயின், அப்போது அம்மரம் தான் பின்னே உதைந்து ஆப்பை முன்புறமாய் வெளியே எப்படி வழுக்கித் தள்ளிவிடுமோ அவ்வண்ணமே, ஒரு மச்சம் நீந்தத் துவக்கி அதன் பருத்த தலையால் நீரைப் பிளந்து கொண்டுபோக, அவ்வண்ணம் பிளப்புண்ட நீர் மச்சத்தின் பின்புறமாய்வந்து அதை முன்னுக்கு நெட்டித் தள்ளுகின்றது. இவ்வாறு தள்ளுவதனால் மச்சத்தின் வேகம் அதிகரிக்க, அந்த வேகத்தால்

உண்மையான அன்பர்கள் அருகிலிருந்தும் அவர்களுடன் நேசிக்க மனம் கொள்ளாமல், தூரத்திலிருப்பவர்களின் நட்பு கிடைக்காதாவென்று அலைகிறவர்களே அதிகம்.

அலுப்புண்ட தண்ணீர் பின்னும் அதிக வேகமாய்ப் பின்புறத்திலிருந்துகொண்டு மீனை முன்னுக்கு நெட்டுகின்றது. மேலும், மச்சங்களுக்குத் தலை பருத்திருப்பதனுல் மற்ரொரு நன்மையுண்டு; ஒருமுனை பருத்து, மற்ரொரு முனை சிறுத்த ஒரு பொருளை வானத்தில் வீசி யெறிந்து பார்த்தால் இவ்விஷயம் தெளிவாய் விளங்கும். அதின் பருத்த முனையே முன்புறமாய்த் திரும்பி வேகமாய்க் கீழே விழுகின்ற தல்லவா? அதுபோலவே, மச்சங்களின் தலையாகிய முன்புறம் பருத்திருப்பதால் வேகமாய் ஓடுவதற்கு மிகவும் சகாயமாகின்றது.

ஃ

இதுவுமல்லாமல் மச்சங்களின் உடல் மேற்புறம் வழவழப்பாயும், முன் எலும்புகளெல்லாம் வாற்புறமாய்த் திருப்பப்பட்டு மிருப்பதால் அது தலையை முன்னிட்டுத் தண்ணீரில் ஓட உடலினுல் எவ்விதமான தடையும் உண்டாவதில்லை. மச்சங்களுக்குத் தலை முதல் வால் வரையில் பல சிதள்க ளிருக்கின்றன. அச்சிதள்கள் சுருக்கவும் விரிக்கவும், முன்னும் பின்னும் கீழும் மேலுமாக அதற்குத் தோன்றியபடி யெல்லாம் திருப்பவும் கூடியவையாய் இருக்கின்றன வாதலால், படவுகளுக்குத் தண்டுகள் எப்படியோ அப்படி மீன்களுக்குச் சிதள்கள் உபயோகப் படுகின்றன. இச்சிதள்களின் உதவியாலேயே மீன்கள் வலது புறமாகவும் இடது புறமாகவும் திரும்பத் திறமை உடையவை யாகின்றன. மச்சங்களின் செதிள்கள் பக்ஷிகளின் சிறகுகளைப் போல ஒன்றின் மீதொன்ருய்ப் படிந்திருக்கின்றன. மீன்களின் முதுகு மற்றப் பாகங்களைப் பார்க்கிலும் பருத்திருக்கின்ற தென்ருலும், இச் செதிள்களின் சகாய மிருப்பது பற்றி மீன்கள் மேல் கீழாக மல்லாந்து போகாதிருக்கின்றன. ஆயினும், மீன் தண்ணீரில் ஸஞ்சரிப்பது அதன் சிதள்களாலல்ல, முக்கியமாய் வாலினுடைய உதவியாலே தான்.

ஃ

தண்ணீருக்குள் சுவாசம் விடுவது முடியாதாகையால், சுவாசம் விடாமல் மீன் தண்ணீருக்குள் எப்படி ஜீவித்திருக்கிறதென்று கேட்பீர்களோ? அப்படியில்லை; மீனும் தண்ணீரிலிருக்கின்ற வாயுவை உட்கொண்டு தான் பிழைக்கின்றது. ஆயின், மனிதரைப்போல சுவாஸாசயத்தால் மீன்கள் மூச்சு விடுவதில்லை; கழுத்துக்கு இரு பக்கங்களிலு முள்ள ஓர் அவயவத்தால் சுவாஸம் விடுகின்றன. தண்ணீரில் நீந்துந் திறமை மனிதர்களுக்கும் மிருகங்களுக்குங்கூட இருக்கிறதென்ருலும், இத்தன்மை அற்புதமானவையாய் நீரில் குடிகொண்டிருப்பதற் கேற்றவாறுள்ள உருவமைப்பு மீனைத்தவிர மற்றெந்த பிராணிக்குமில்லை.

---

ஒரு காரியஸ்தலத்தின் பிரதானஸ்தர் எந்த வேலையும் செய்யாதது போலவே தோன்றும். சும்மா வெறுமனே உட்கார்ந்திருப்பதாகவே காணப்படும். ஆனுல், அவரின்றி ஒரு சுண்டுவிரலையும் அசைக்கமுடியாதென்பதும், மற்றவர்கள் செய்யும் வேலைகளுக்கெல்லாம் அவர் மூளையிலிருந்து எவ்வளவோ உத்திரவுகள் புறப்பட்டு அவ்விதம் நடத்திவருகிறதென்பதும், அந்தப் பிரதானஸ்தர் காரியஸ்தலத்திற்கு வராதுபோகும் நாட்களில்தான் அவை யாவும் புலப்பட்டு, அவரது அருமையும், நிர்வாக உழைப்பும் தெரியவரும்.




# இராஜ சந்திரன்



(612-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XVII.

கோர்ட்டார் :—நீ குமாரசாமியைக் கொல்லாதிருந்தால் அப்படிப் பயந்து ஓடக் காரணமென்ன?

இராஜ சந்திரன் :—சுட்ட தங்கவேலு மாயமாய் ஓடிவிட்டான். நானோ மூடத்தனமாய் என் துப்பாக்கியே இறந்தவரின் அருகில் கிடக்க, அதனால் நானே சுட்டதாகப் பிறர் நம்பும்படியான நிலையை உண்டாக்கி மதிமோசமாய் அகப்பட்டுக்கொண்டேன். அதனால் அறிவு மயங்கித் திகில்பட்டு ஓடினேன். இது என் மூடத்தனமே.

கோர்ட்டார் :—நீ தங்கவேலுவை அதற்கு முன்பு பார்த்ததுண்டா? அவனுடன் பேசி யிருக்கிறாயா?

இராஜசந்திரன்:—பலமுறை அபிராமியுடன் அவன் பேசி நின்றதைப் பார்த்திருக்கிறேன். அவன் புறப்பட்டுப்போன பிறகுதான் அபிராமி என்னுடன் பேச வருவாள். நான் தங்கவேலுடன் பேசியதில்லை. வலியச்சென்று பிறரிடம் பேசி நட்பு கொள்ளும் வழக்கம் எனக்குக் கிடையாது. நான் என் புஸ்தக பத்திரிகைகளுடனேயே என் வீட்டில் பொழுது போக்குகிறவன்.

கோர்ட்டார் :—உனக்குத் தங்கவேலு மீது பொறாமையுண்டா?

இராஜசந்திரன் :— அபிராமியின் காதல் விஷயமாகத்தான் பொறாமை. ஆனால், அவனுக்கு நான் கெடுதி தேடவில்லை. என்னையே அவன் படுகுழியில் தள்ளினான். அபிராமி வேண்டுமென்றே என்மீது கொலைக் குற்றம் சாட்டினாள். அவள் கருத்து தன்னுடைய பிரியமான காதலனை தங்கவேலைத் தப்புவித்துவிடும்படியிருக்கலாம். பிறகு நடந்த விசாரணையில் நானே கொலையாளி என்றும் தீர்ப்பாகிவிட்டது. தெய்வமே என்று இதுவரை தலைமறைந்து கூலிவேலை செய்து பிழைத்து ஒளிந்துகொண்டு கிடந்தேன். போலீஸாரைவிட என் தகப்பனாரே முதன்மையாக இருந்து என்னைப் பிடித்துக் கொடுத்துக் கௌரவம் பெற்றுக்கொள்ளத் தம்மால் ஆனமட்டிலும் முயன்றார். தெய்வ சகாயத்தால் அவர் கைக்கு நான் அகப்படவில்லை. உயர்ந்த குடும்பத்தில் பிறந்தும் என் தலைவிதி இப்படியாயிற்று. நான் ஒரு பாவமும் அறியேன் (என்று அழுதான்.)

ஃ

பிறகு லக்ஷ்மணசாமி விசாரிக்கப் பட்டான்.

கோர்ட்டார் :—கொலை நடந்த தினம் நீ இராஜசந்திரனைப் பார்த்ததுண்டா? அது எவ்விடத்தில்?

லக்ஷ்மணசாமி :—கொலை நடந்த தினத்தன்று மாலையில் நான் இராமசாமியின் தோட்டத்தருகே உலாவிக் கொண்டிருந்தேன். இராஜசந்திரன் ஒரு துப்பாக்கியுடன் அப்பக்கம் வந்து அபிராமியிடம் கொடுத்து விட்டு நின்றதைக் கண்டேன். அவள் அதைத் தன் தந்தையிடம் தந்து விட்டு வெளியில் வந்ததும் தங்கவேலு அங்கு சைக்கிளுடன் எதிர்ப் பட்டான். அவ்விருவரும் பேசி நிற்கையில் திடீரென்று அபிராமி கிணற்றுப்பக்கம் குடத்துடன் விரைந்து சென்றாள். அதே சமயம் தங்கவேலு குமாரசாமி முதலியாரின் வீட்டுக்குள் நுழைந்தான். சில நிமிஷங்களுக்குப் பிறகு பயங்கரமான குண்டு ஓசை கேட்டுத் திகைத்தேன். சிறிது நேரம் பொறுத்துத் துப்பாக்கியுடன் இராஜசந்திரன் ஓடிவர, அவனை என்னவென்று கேட்டதற்குத் துப்பாக்கியை எறிந்துவிட்டு ஓடிவிட்டான். அபிராமி அவனே தன் தந்தையைக் கொன்றதாக என்னிடம் வலியவந்து கூறினாள். அப்பொழுது எதிராஜனும் அங்கு வந்து எங்களுடன் சேர்ந்துகொண்டான். அபிராமி கூறியதை நாங்கள் முன் யோசனையின்றி அப்படியே நம்பிவிட்டோம். இராஜசந்திரன் கொன்றதாக முதன் முதலில் கதை கட்டியவள் அபிராமி தான். பெண்ணின் பேச்சில் எத்தகையோரும் மயங்கி விடுகிறார்கள். அவள் அழுதுகொண்டே கூறியதால் எங்களுக்கு அது உண்மைபோலத் தோன்றிற்று. அபிராமியைப்போன்ற துர்ச்சரிதை யுள்ளவர்கள் நீலி அழுகை அழுவது வெகு சுலபமே.

கோர்ட்டார் :—உள்ளே சென்ற தங்கவேலு எப்போது வெளியே வந்தான்? குண்டு சத்தம் கேட்பதற்கு முன்பே வெளியில் வந்துவிட்டானா?

லக்ஷ்மணசாமி :—அவன் வீட்டுக்குள் நுழைந்த சில நிமிஷங்களுக்குள் குண்டு சத்தம் கேட்டது. அந்த சமயம் இராஜசந்திரன் ஒரு மரத்தின் ஓரமாக வெளியிலேயே நின்றிருந்ததை நன்றாக அறிவேன். குண்டு சத்தம் கேட்ட அடுத்த நிமிஷத்தில் தங்கவேலு வெளியே வந்து தன் சைகிளில் ஏறி வெகு வேகமாய்ச் செல்வதைக் கண்டேன். அதேசமயம் இராஜசந்திரன் உள்ளே ஓடிப் பிறகு துப்பாக்கியுடனே வெறிபிடித்தவன் போல என்பக்கம் விரைந்து வந்தான்.

ஃ

கோர்ட்டார் பிறகு எதிராஜனை விசாரித்ததில், வேகமாய்ச் சைகிலில் சென்ற தங்கவேலுவைப் பார்த்துவிட்டு லக்ஷ்மணசாமியிடம் வந்தபோது, இராஜசந்திரன் எங்களைத் தாண்டிக்கொண்டு துப்பாக்கியுடன் ஓடினனென்றும், பிறகு அவனைத் துரத்தவே, துப்பாக்கியை எறிந்துவிட்டுச் சென்றானென்றும் புகன்றான்.

கோர்ட்டார் :—குண்டு சப்தம் கேட்டபோது இராஜசந்திரன் ஒரு மரத்தின் ஓரமாய் நின்றிருந்ததாக நன்றாய் ருசுவாகிறது. இதை எதிராஜனும் லக்ஷ்மணசாமியும் மறுக்க முடியுமா?

லக்ஷ்மணசாமி:—இராஜசந்திரன் கொலை செய்யவில்லையென்று நிச்சயமாய்ச் சொல்வேன்.

எதிராஜன் —:மூடத்தனமாய் ஓடியதால் சந்தேகிக்கப்பட்டானே தவிர, இராஜசந்திரன் கொல்லவில்லை. குமாரசாமியின்மீது அவனுக்கு எவ்வித பகையுமில்லை. அவர்மீது பிரியம் வைத்தே தன் துப்பாக்கியையும் அவருடைய வேட்டைக்குக் கொடுத்தவன் ஒருபோதும் கொலை செய்திரான். அவனுடைய பேனு பிடித்த புத்திசாலித்தனமான கை ஒரு கொலை

லயச் செய்யத் துணிவு கொள்ளாது. துணிய எந்தக் காரணங்களுமில்லை.

ஃ

நியாயாதிபதி இருவரையும் போகும்படி, கூறிவிட்டு, தங்க வேலுவை விசாரித்தார்.

கோர்ட்டார் :—குமாரசாமி முத லியார் உனக்கு அபிராமியைக் கொடுக்க சம்மதப்பட்டிருந்தாரா?

தங்கவேலு :—நான் மிக்க அழ குள்ளவனு யிருப்பதால், அதிகமான அழகுள்ளவர்கள் பெரும்பாலும் அயோக்கியர்களாயும், கொலை விபசாரம் செய்யும் சண்டாளர்க ளாயுமே முடிவது தாம் கண்ட அநுபவமென்றும், நான் என் தந் தைக்கு அடங்கி நடந்து கொள்ள வில்லை யென்றும், ஆனதால் அபி ராமியை ஒருபோதும் தரமுடியா தென்றும் கண்டித்துக் கூறிவிட்டார்.

கோர்ட்டார் :—அதற்குப் பிறகும் அங்கு ஏன் போய்க்கொண்டிருந்தாய்?

தங்கவேலு :—குமாரசாமி ஒப்பா விடினும், அபிராமி என்னைக் காத லிக்கிறுள் என்று தெரிந்ததால் அங்கு போய்க்கொண்டிருந்தேன். பெண் ணரசியின் காதலை மட்டும் பெற்று விட்டால், அப்பெண்ணின் பெற்றோர் களது சம்மதமே தேவையில்லைதான்.

கோர்ட்டார் :—கொலை நடந்த தினம் நீ அவரைக் கண்டாயா? இங்கே காதல் பிரசங்கம் எதுவும் செய்யாமல் மரியாதையாகச் சொல்.

தங்கவேலு:—நான் அன்று மாலை யில் அபிராமியுடன் பேசுவதை ஜன் னல் வழியாகக் குமாரசாமி முதலி யார் பார்த்துச் சினந்து என்னை வரும்படி அழைத்தார். அபிராமி தன் தந்தையை ஜன்னலின் அருகே கண்டதும் தனக்குத் திட்டுகள் கிடைப்பது நிச்சயமென்று நடுநடுங்கி, ஜலமெடுக்கப்போவதுபோல் நடித் துக் குடத்தை எடுத்துக்கொண்டு கிணற்றுப் பக்கம் ஓடிவிட்டாள். நான் உட்சென்றதும், "நீ என் இங்கு வந்து அபிராமியுடன் பேசுகி ருய்? அட முட்டாளே! நீ என் குடும்பத்தைக் கெடுக்கவா தோன்றி ஞய்? சீ நாயே!" என்று கோபித்து வைதார். நான் உடனே வெளியில் வந்து என் சைகிளில் ஏறிச் சென்று விட்டேன்.

கோர்ட்டார் :—குண்டு சத்தம் எப்போது கேட்டது? அந்த சமயம் நீ எங்கே யிருந்தாய்?

தங்கவேலு :—நான் வெகுதூரம் சைகிளில் போனபிறகு குண்டு சப் தத்தைக் கேட்டேன். குமாரசாமி முதலியார் எதையோ சுடுவதாக நினைத்தேன்.

கோர்ட்டார் :—உன்னைக் குமார சாமி முதலியார் கோபித்ததும், நீ ஆத்திரத்துடன் அவருக்கருகே யிருந்த துப்பாக்கியை எடுத்துச் சுட்டுவிட்டாயோ? அங்கு நீ சிக்கிக் கொள்ளாதிருக்கவே சைகிளில் உடனே வேகமாய்ப் பறந்தாய் போலும்.

தங்கவேலு :—இல்லை, நான் சுடவேயில்லை, கொலை செய்யவே யில்லை. இராஜசந்திரன்தான் கொன் றதாகச் சொல்லிக்கொண்டார்கள். அப்படியே முன்பு தீர்ப்பும் ஆகியிருக் கிறது. நான் ஒரு பாவமும் அறியாத நிரபராதி. இது ஆண்டவன் அறிய சத்தியமான வார்த்தை.

ஃ

இவ்வளவுடன் விசாரணை முடிவு பெற்றது. நியாயாதிபதி விசாரணை யின் முடிவை ஓர் சரித்திரம்போல் ஜூரிகளுக்கு வாசித்துக் காண்பித்து, குற்றஞ்சாட்டப்பட்டுள்ள பொன்னு சாமி குற்றவாளியா அல்லவா என்று தெரிவிக்கும்படி கேட்டார். S. G. R.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)




பன்னியூர் படாடோபசர்மா; அல்லது மயனுலக மத மயக்கம்:—

[சிருங்கார ரஸ நாவல். ஸ்ரீமான் வடூர் துரைசாமி ஐயங்கார் அவர்கள் பி. எ. இயற்றியது. டபுள் கிரவுன் 1 X 16 அளவில் 428-பக்கங்களுள்ளது. விலை ரூபா 2—4—0.]

ஐரோப்பிய நாடுகளில் காணும் காம ஆபாஸங்களையும், விபரீத நாகரீகப் போக்குகளையும், விருத்த விவாகத்தின் அலங்கோல முடிவுகளையும், அனுகூல சத்துருவான வேலைக்காரனால் ஒரு குடும்பத்திற்கு நேரும் ஸர்வ நாசகரமான அனர்த்தங்களையும், வீட்டின் தலைவன் தனது ரகசியங்களைத் தனது வேலையாட்களிடம் வெளியிட்டு விடுவதனால் விளையும் கேடுபாடுகளையும், ஒரு குடும்பத்தைக் கெடுத்துத் தாங்கள் வாழ நினைப்போர் முடிவில் அழிவையே தேடிக்கொள்கின்றார்களென்பதையும், மதபோதகர்களான குருக்கள் அந்தரங்கத்தில் நடந்துகொள்ளும் துன்மார்க்கச் செயல்களையும், வியபிசார விடுதிகளின் அக்கிரமங்களையும், கள்ளங்கபடற்ற யுவதிகள் எளிதில் பிறரின் வசப்பட்டு மயங்குவதையும், அந்த உத்தமிகள் படுகுழியில் விழப்போகும் தருணத்தில் தெய்வசகாயம் அவர்களை எவ்வாறு தப்புவிக்கின்றதென்பதையும், இன்னோன்ன பல அநுபவங்களையும் ஒரு கதாரூபமாகத் தொகுத்து இதன் ஆசிரியர் இந்த நாவலை வெளியிட்டிருக்கின்றார். காமத்தையும் காதலையும் விவரிக்கப்புகுமிடத்து, காமத்தையலங்கோலப்படுத்தி அதன் தீமைகளை வெளியிட்டு ஸத்போதனைகளை அத்துடன் உணர்த்துவது தான் நன்ருகும். இந்நூலில் காமத்தையே பிரதி பக்கங்கள் தோறும் விவரித்துள்ளது. காம விரகதாபமே இந்நூலின் அரசாட்சியாதலின் விவாகமான ஸதிபதிகளுக்கே இந்நூல் எற்றது. கட்டிக்கரும்பாளை சின்னதுரை நேசிப்பதை ஆரம்பத்திலேயே தவிர்த்துவிட்டிருந்தால் பிந்திய ஆபாசங்கள் நேர்ந்திராது. இப்பாவிகளின் பிந்திய நாள் 426-ம் பக்கத்தில் ஒரு சிறிய பாராவில் பூர்த்தியடைந்து விடுகின்றது. அங்கு உக்கிரகமான கண்டனமும் நீதிபோதகமும் கூடியிருக்கவேண்டும். இவ்விருவரின் காமவிகார லீலைகளைக் குயில்மொழியாள் காணுவதும் பச்சை பச்சையாய் விஸ்தாரமாயுள்ளது. 132-ம் பக்கத்திலுள்ள டான்ஸூம், சிற்றின்ப சிவராத்திரியும் காமத்தைக் கிளப்பிவிடக்கூடிய தாதுபுஷ்டி லேகியந்தான். 56, 63-பக்கங்களில் மார்பகத்தைப் பற்றியும், 75-ம் பக்கத்தில் "ஆடைகளை அவிழ்த்து" என்றும், "இரவிக்கை கிழிந்தது" என்றும் இன்னும் இதுபோன்ற காம வசனங்களாலேயே இந்நூல் முற்றிலும் ஆக்கப்பட்டுள்ளது.

கதம்பமாலை:—

[சென்னை "ஜெகன்மோகினி" ஆசிரியர் ஸ்ரீமதி பண்டிதை வை. மு. கோதைநாயகி அம்மாள் அவர்கள் இயற்றியது. டிம்மி 1X8 அளவில் 184-பக்கங்கள் உள்ளது. விலை ரூபாய் 1.]

இதனில் 13 - சிறு கதைகளும் நாவல்களும் அடங்கியுள்ளன. ஒவ்

வொன்றும் அழகாக உத்தமமான நீதி போதனைகளுடனும், ஸமத்காரமான கற்பனைகளோடும் முடிக்கப்பெற்றுள்ளது. அவற்றின் அருமையை வாசகர்கள் எளிதிலுணர்ந்து கொள்வர். கதைகளை இயற்றும் முறையில் இதன் ஆசிரியரது விசாலமான நடையும், வடுவூர் ஸ்ரீமான் துரைசாமி ஐயங்காரவர்களின் விசாலமான நடையும் ஒன்றையொன்று அனுசரித்து நிற்கின்றன. இவ்விதம் வரைவதை மற்ற ஆசிரியர்களிடம் காண முடியவில்லை. பிரதி பக்கங்கள் தோறும் அடியில் குறிப்பிட்டுள்ள அனுபவங்கள் மிக்க ருசிகரமாயுள்ளன. ஸ்ரீமதி அம்மையார் ஒரு பெரிய அனுபவஞானியாகவே அந்தக் குறிப்புகளின் மூலம் தோன்றுகின்றார். தமிழில் பல நாவல்களை உதவிய பண்டிதை விசாலாக்ஷியம்மாளுக்குப் பிறகு ஸ்ரீமதி கோதைநாயகியம்மாளைச் சிறப்பித்துப் பேசும் வண்ணமாக 18 - நவீனங்கள் வரையும் இயற்றி வெளியிட்டுள்ள அருமை போற்றற்பாலது. இவ்வாறாக, பல சிறந்த நூல்களை இயற்றும் ஆற்றலைத் தமது கல்வி விசேஷத்தாலும், பிறவி ஆசிரியத்தன்மையாலும் இவர் பெற்றுள்ளார். இவரது நூல்கள் ஒவ்வொன்றும் பெண்மணிகள் யாவராலும் விருப்பமாய் வாசித்தற்குரியதாகும். "கதம்பமாலை" என்று இந்நூலுக்கு இட்டுள்ள பெயர் மிகப் பொருத்தமாயும் திவ்யமாயும் உள்ளது. எளிய நடையில் கவிதை புனைவது கடுமையான தொழில். அவ்விதமே, சிறு கதைகளை இயற்றுவதும் மிகு பிரயாசையுள்ள நுட்பமான வேலை. இவரது நவீனகங்கள் தமிழ் நாட்டில் பலராலும் வாசிக்கப்பட்டுச் சிலாகிக்கப்படுகின்றன.

[இப்புத்தகங்கள் "அமிர்த குணபோதினி" ஆபீஸில் கிடைக்கும்.]

---

நண்ப, நீ வந்த வேளையில் நான் கொடிய வறுமையிலிருக்கிறேன். என் சக்திக்கு இயன்றவரை உன்னை உபசரித்தேன். உன்னுடன் ஓடியாடிக் குலாவினேன். உன்னை நான் திருப்திபடுத்த முடியும். உனக்கு என்மீதுள்ள அன்பில் நான் பழய சாதம் இட்டாலுங்கூட அமிர்தமாய்க் கருதியுண்டு திருப்திபடுவாய். என்னுடன் இருப்பதொன்றையே நீ பெரிதாக நினைப்பதில், வேறுவித ருசிகளை யறியவோ, அந்த இந்த காய்கறிச் சுவைகள் இல்லையே என்று மனக்கோணல்கள் கொள்ளவோ உன் சிந்தை போகாது. ஆனல், உன் வீட்டாரும் உன்னைப்போலவே, இருப்பாரென்று நீ நினைக்கக்கூடாது சற்று உபசரிப்பு குறையின் அவர்கள் கோபிப்பது திண்ணம்; அதன் பொருட்டு என்னை வெறுத்து அலக்ஷியமாய் அவமதிப்பாகப் பேசுவதும் கூடும். ஆகவே, நீ எத்தனை நாளாயினும் இங்கு இருக்கலாம். உனக்கு என்னிடமிருந்து புது மரியாதை எதும் தேவையில்லை. ஆனல், மரியாதையுடன் நான் நடக்கவேண்டிய உன் வீட்டினர் அப்படியல்லவாதலால் வேறு இடத்தில் தங்கியிருக்க ஏற்பாடு செய். அ பிறகு மனஸ்தாபமில்லாதிருக்கது வழியாகும். என் கொடிய வறுமையால் இவ்விதம் சொல்ல நேர்ந்ததற்கு வருந்துகிறேன். இவ்விதமான நிலைப்பில்—வறுமைநிலையில்—எனக்கு முன்பு எத்தனையோ பேர் அகப்பட்டுத் தவித்துமிருக்கிறார்கள். ஔவையும் கூழுக்குப் பாடியே; காளமேகனும் சால வறிஞனே; இரட்டையரும் வறுமையில் ஈடில்லாதவரே; கம்பனும் "நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே" என்று பாடிப் பசியால் வாடிக் களைத்துச் சோர்ந்தவரே.

# ஹாஸ்ய சஞ்சீவினி.



தோசைக்காரி :—ஒரு அகப்பைக்கு மேலே அதிகமாக ஏன் மாவை ஊற்றினாய் :

அவன் மகன் :—அவர்கள் வழக்கமாய் வந்து வாங்குகிற பணக்காரராச்சுதே ?

தோசைக்காரி :—மாவு அதிகம் ஊற்றியது வெளிக்குத் தெரியவே தெரியாது. கணக்குக்குமேல் கூட ஒரு தோசை சேர்த்துக் கொடுத்தால், அப்போதுதான் அதிகமாக ஒரு தோசை தந்ததாய் எண்ணுவார்கள்.

ஃ

பக்ஷணக்கூடையோடும் தன் பந்துவைக் காணவந்த காமாக்ஷி தன் கூடைப் பக்கம் ஓடிவந்த அவ்வீட்டின் குழந்தைகளைப் பிடித்துத் தள்ளிவிட்டு, அக்குழந்தைகளின் தாயை எதிர்பார்த்து நின்றாள். அந்த சமயம் அங்குவந்த மீனாக்ஷி தான் கொண்டுவந்த பக்ஷணங்களைக் குழந்தைகளுக்கு அன்புடனே கொடுத்தாள். இதைக் கண்ட,

காமாக்ஷி :—பழங்களை இப்போதே ஏன் எடுத்துக் கொடுத்தாய்? குழந்தைகளுக்கு நீ கொடுத்ததை அவர்களின் தாய் அறியவேண்டாமா ?

மீனாக்ஷி :—அந்தப் பெருமை எனக்கு வேண்டாம். குழந்தைகள் தின்பதற்கேயன்றி, பிறர் மெச்சவேண்டுமென்று நான் பழங்கள் வாங்கிவரவில்லை.

இதற்குள் வெளியே சென்றிருந்த தாயார் வரவே, காமாக்ஷியும் தன் பக்ஷணக்கூடையை அவளிடம் தந்து பெருமையில் பூரித்தாள். இதைக் கண்டு மீனாக்ஷி சிரிக்கவே, அவளோடு குழந்தைகளும் சேர்ந்து நகைத்தன.

ஃ

தகப்பனார் பொடி டப்பியைக் கையில் வைத்துக்கொண்டு குமார்த்தியிடம் பேச நெருங்கினார்.

குமார்த்தி:—அந்தப் பொடியைப் போட்டுக் கொண்டு பிறகு பேசு அப்பா! அப்போதுதான் சுறுசுறுப்பாகப் பேசுவீர்கள்.

தந்தை:—மூக்குப்பொடி சுறுசுறுப்பு தருமென்பதை நீ எப்படி அறிந்தாய்?

குமார்த்தி:—எந்த சங்கதிக்கும் முதலில் நீங்கள் பொடியை உறிஞ்சுகிறீர்கள். பிறகு மூக்குத் துண்டில் சிந்துகிறீர்கள். பிறகு அத்துண்டை சட்டைப்பையில் போடுகிறீர்கள். எல்லாம் மிகச் சுறுசுறுப்பாக நடப்பதால் அப்படி சொன்னேன்.



ஃ



புதுமாப்பிள்ளை:—என்ன கிருஷ்ணா! இப்படி இளைத்து எலும்பானாய்? உன் விவாகத்திற்குமுன் நன்றாக உப்பியிருந்தாயே?

கிருஷ்ணன்:—உனக்கு வந்த மனைவி நல்லவளானதில் நீ தொந்திவிழுந்து யானை போலானாய். உன் தகப்பனார் வேண்டிய சொத்து வைத்துப்போனார். புசிப்பு விசாரமில்லாததால் கொழுத்து உப்பிவிட்டாய். எனக்கு வந்த மனைவி எதிர்த்துப் பேசுகிறவளாய் என்னைப் படுத்துகிற பாட்டில் இப்படி யானேன். அத்துடன் வயிற்றுப் பிழைப்பு விசாரமும் கடனும் வேறே!

ஃ

கணவன்:—உன்னை முத்தமிடக் குனிவதற்குள் என் முதுகு எலும்பெல்லாம் வலியெடுத்துக் கொள்ளுகிறது. என் இவ்வளவு குள்ளமாய்ப் பிறந்தாய்?

மனைவி:—நீங்கள் எங்குபோனாலும் ஒரு குழந்தைமாதிரி என்னைத் தூக்கிக்கொண்டு போவதற்கே நான் இப்படி சின்னப்பெண்ணா யிருக்கிறேன். நெட்டை பழயகாலம், குட்டைதான் இப்போதைக்கு அழகு. நொட்டையான பெண் நாகரிகமில்லை, இரத்தினமில்லை வைத்து ஜடைபோட்டுக்கொண்டால் பார்த்தவர்கள் சிரிக்கும்படி யிருக்கும். அந்த நெட்டையை உன்தாயா, தமக்கையா என்று கேட்டுப் பரிகசிப்பார்கள். ஆகவே, குட்டையான பெண்தான் அழகு.



ஃ



## உண்டானபோது கோடானு கோடி உறவின்முறையார் தொண்டாகவே வந்து தொழுதிடுவர்.

தொழுவதுமட்டுமோ? வெகு உருக்கமாக வீட்டுவேலைகள் செய்வதிலும் பங்கு பெற்றுக் கொள்வார்கள்! கண்டதும் எழுந்து நின்று மரியாதை செய்வார்கள்! வெகு வணக்க ஒடுக்கம் படிப்பார்கள்! மகா விசுவாசிகள்போல் தாளம் கொட்டுவார்கள்! பிரியத்தோடு பார்க்கவே வீடுதேடி வந்ததாகக் காட்டிக்கொள்வார்கள்! நன்றாக நாலுமாதம் உட்கார்ந்து தின்று ஏப்பம் விடுவார்கள்.

ஃ



**செல்வம் சிந்திவிட்டால், கண்டாலும் பேசார், அழைத்தாலும் வாரார்,**சண்டாளர் உறவின் முறையார்.**

கையில் காசு உள்ளமட்டுமே உறவு! விருந்துகள் செய்து உபசரிக்கிற வரையுமே நேசமும் பந்தத்துவமும்! கைவறண்டதானால் எவருமே வீட்டுக்கு வரார். அந்த அற்பபயல் வீட்டுக்கா போகிறதென்பார். மரியாதை தெரியாத மூடனின் வீட்டுவாசலை இனி யார் மிதிப்பார்கள்? அப்படித்தான் வேண்டும் அந்தப் பயலுக்கு என்று ஏசிவிட்டு அடியோடு ஒதுங்கிவிடுவார்கள் இறந்தால்கூட எட்டிப் பாரார்கள். இவர்களுக்கே ஆக்கிக் கொட்டவேண்டும்!

ஃ



ஒரு பிராமண ஸ்திரீ துணையின்றித் தனி வழியே ஒண்டியாகப் போய்க்கொண்டிருக்கையில் ஒரு திருடன் எதிர்ப்பட்டு அவளுடைய கழுத்திலிருந்த கெடியார சங்கிலியை அறுத்தான். ஸ்திரீ தைரியசாலியாதலின் கள்வனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கூவினள். தக்ஷணமே அங்கு மற்றொருவன் ஓடிவந்தான்.

மற்றொருவன்:—அவன் கையை விடுங்கள், நான் அந்தப் போக்கிரிப்பயலை உதைக்கிறேன். இதோ அவனுக்கு ஒரு பலத்த குத்து விடுகிறேன் பாருங்கள்.

பிராமண ஸ்திரீ:—(திருடனின் கையை விட்டுவிட்டு) ஐயா! அவனை நன்றாக உதைத்து என் பொன் சங்கிலயை வாங்கிக்கொடுங்கள் என்றாள்.

மறுநிமிஷம் இருவரும் சேர்ந்து கடியார சங்கிலியுடன் ஓட்டம் பிடிக்கவே, பிராமண ஸ்திரீ ஏமாறித் தலையிலடித்துக்கொண்டு கதறினள்.

---

(1) நம்புவதால் நீங்கள் ஒருபோதும் வெற்றியடையப்போவதில்லை. மற்றவர்களிடமிருந்து உதவி எதுவும் கிடைக்குமென நீங்கள் நம்பக்கூடாது. (2) இந்தியர்களுக்கு வாய்ப்பேச்சு பேசும் சக்தி ஏராளமாக இருக்கின்றது. இது மிக்க கோரமாக இருக்கிறது.***எல்லோரும் பேசுகின்றனர். ஆனால், உண்மையில் எதுவும் செய்வதில்லை. புத்திசாலிகள் எவரும் ஒருபோதும் பேசுவதில்லை.—மிஸ்டர் பேர்னர்ஷா.

---

எல்லாம் தெய்வச்செயலின்படி நடப்பனவாதலின், தான் எதிர்பார்க்கும், எந்த நன்மைக்கும் அதற்கு இடையிலே நேர்கிற விரோதத்திற்கும் மனிதன் சகித்துப் பொறுத்துக்கொள்ள வேண்டியவனாயிருக்கிறான்.

# சென்றமாதம்

ஆலயப்பிரவேச மசோதாக்கள் :-

ஹரிஜனங்கள் ஆலயப் பிரவேசம் செய்வதையே பிரதானமாய் ஆதரிக்கும் டாக்டர் சுப்பராயனின் மசோதாவை இராஜப்பிரதிநிதியார் மறுத்து விட்டு, வழக்கங்களின் மூலமாகவும் சட்டங்களின் மூலமாகவும் ஹரிஜனங்களை இழிந்தவர்களாக ஈனப்படுத்தித் திரஸ்கரிப்பதைத் தடுக்கும் அம்ஸங்களுடன் கூடியுள்ள ஸ்ரீமான் ரங்கய்யரின் மசோதாவுக்கு அனுமதி கொடுத்திருக்கின்றார். இது விசேஷித்த ராஜ தந்திர நிபுணத்துவத்தைக் காட்டுகின்றது. ஆலயப்பிரவேச மறுப்பினால் வைதிகர்கள் வெற்றி கொண்டாடிக் குதூகலப்படுகின்றனர். பொது நோக்காகக் கவனிக்கையில், எப்படியோ ஒரு வீட்டிற்குள் வீணாகப் பெரும் சச்சரவும், அதனால் ஒற்றுமைத் தாழ்வும், பகைமையும், பிரிவினையு மென்றே தோன்றும். என்னவோ ஸ்வராஜ்ய மென்றார்களே! அந்த ஓசையையே காணோம்! ஆலயப்பிரவேசத் தடைப் பின் வெற்றியே ஸ்வராஜ்யம் போலும்!

ஃ

தேச பாஷையில் கல்வி முறை :—

அகில இந்தியவின் கல்வி முறையைப்பற்றி 1931-ம் வருஷ அறிக்கையை இந்திய ஸர்க்காரின் கல்விக் கமிஷனர் வெளியிட்டிருப்பதில், ஆங்கில மல்லாத இதர பாடங்களுக்குத் தேச பாஷையில் கற்கவும் விடை சொல்லவும் வசதியளிக்க முயன்றிருப்பதாய்த் தெரிகிறது. பம்பாயில் மெட்ரிகுலேசன் பரீக்ஷையில் சரித்திர முதலிய பாடங்களுக்குத் தேசபாஷையிலேயே பரீக்ஷை விடைகளை எழுத ஏற்பாடாயிற்றென்றும், 100-க்கு 60-பேர் இவ்விதம் தேசபாஷையிலேயே விடை எழுதினரென்றும் தெரிகிறது. இன்னும் இம்முறையை விசாலப்படுத்தவும் யோசனையி லிருக்கிறதாம். பழங்காலத்தில் தேச பாஷையிலேயே ஆங்கிலம் தவிர மற்ற யாவும் போதிக்கப்பட்டன. எத்தனையோ அரிய விஷயங்கள் ஆங்கிலத்தினின்றும் தேசபாஷைகளில் அப்போது மொழிபெயர்க்கப்பட்டன. பிறகு அந்த நிலை மாறி "ஸர்வம் ஆங்கில மயம் ஜகத்" என்று கணிதம் முதல் யாவும் ஆங்கிலத்தில் ஊர்வலம் வரத்தொடங்கின. நான்காவது வகுப்பு வரையில் தமிழிலேயே கணக்குகள் எழுதி வந்த மாணவன் முதல் பாரம் எனும் ஐந்தாவது வகுப்பு வந்ததும் ஆங்கிலத்தில் உபாத்தியாயர் கணக்குகளைக் கூற, அதை மாணவன் கஷ்டத்துடன் ஊகித்தறிந்து எழுதும் வண்ணம் நிர்ப்பந்திக்கப் பட்டான். இப்போது பழங்காலத்திய தேசபாஷா போதகம் மறுபடியும் திரும்ப முற்படுகிறது போலும்.

ஃ

மறுபடியும் தீவேலரா :—

அயர்லாந்தின் பார்லிமெண்டு கலைந்து தேர்தல் நடந்ததில் மறுபடியும் முந்திய பிரஸித்த தலைவரான திவேலராவே 77-வோட்டுகளின் மூலம் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கி

றார். அவருக்கு அடுத்தபடியிலுள்ள கக்ஷியார் 48-ஓட்டுகள்தான் பெற்றுள்ளார். டிவேலரா இப்போது தலைவராவதில் அயர்லாந்தின் சம்பந்தமாய் அநேக விஷயங்கள் நேரக்கூடும். ஒரு காலத்தில் டிவேலராவின் தலைக்கு எத்தனையோ ஆயிரம் பவுன்களை வைத்து அவரைக் கண்டுபிடிப்போருக்குத் தருவதாய் விளம்பரம் செய்தனர். போலீஸார் எவ்வளவோ தேடியும் டிவேலரா அகப்படவேயில்லை. இப்படி எத்தனையோ கதைகள் நடந்தன. அவரைச் சிறையிவிட எவ்வளவோ பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. இப்போது அந்த டிவேலராவே சுவாதீன அயர்லாந்தின் மா பெருந்தலைவராய் அதிக ஓட்டுகளால் மறுபடியும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார். உலக ஆச்சரியங்களில் இதுவும் ஒன்று.

ஃ

அடுத்த புது அரசியல்:—ஸர்வ கட்சி மகாநாடு லண்டனில் மூன்று முறை கூடியதன் பலனாக இந்தியாவுக்கு ஏதோ புது அரசியல் முறை வரப்போகிறதென்று சொல்லப்படுகிறது.

ஃ

ஸ்ரீமான் ரங்கய்யரின் புதிய மசோதா:—டாக்டர் சுப்பராயனின் ஆலயப்பிரவேச மசோதாவையே பெரும்பாலும் தழுவி ஸ்ரீமான் ரங்கய்யர் இந்தியா சட்ட சபையில் ஒரு மசோதா கொண்டுவர முற்பட்டிருக்கிறார். இதற்கு இராஜப்பிரதிநிதியாரின் அனுமதியும் கிடைத்திருக்கிறது. எப்படியோ ஹரி ஜனங்கள் ஈன நிலையிலிருப்பதை உயர்த்த வேண்டுமென்ற கிளர்ச்சி யொன்று வலுத்துவிட்டது. இனி அதை மூடி அடக்க இயலா. ஒரு யானையை வென்று விடலாம். ஆனால், யானைக் கூட்ட முழுவதையுமே வெல்வதென்பது கஷ்டம். விழித்துக்கொண்டோரைத் தூங்கவைப்பது எப்போதுமே சாத்தியமல்ல.

ஃ

இராஜப்பிரதிநிதியின் பேச்சு:—ஸமீபத்தில் இராஜப்பிரதிநிதியார் இந்தியாவின் நிலைமையைப் பற்றிப் பேசியிருப்பதில், சட்ட மறுப்பை எதிர்த்தே காரியம் செய்ய வேண்டுமென்றும், காங்கிரஸ்காரர்கள் தாங்களே வந்து குனிந்து பணிந்துபோக வேண்டுமென்றும் பொருள்படயிருக்கிறார்.

---

எட்டுப்பக்கங்கள்வரையில் பத்திரிகைக்கு ஒருவர் எழுதிய சங்கதியில் ஸத்து எவ்வளவு இருக்கிறதென்று பார்க்கபுகின், எட்டுப்பக்கத்தையும் ஒரு பக்கத்தில்தானே அடக்கிவிடலாம்போலிருக்கிறது. எழுதுதற்கு விஷயச் சரக்கு அகப்படாதவர்கள்தான் வீண்வளர்ப்பு செய்து பெருக்கிச் செல்வார்கள்.

---

அக்கினி ஜ்வாலைக்குச் சமமாகச் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு நல்லவிதமாக நடந்துகொள்ளுகிறவரை நல்லதாகவே, யாவும் லாபமாகவே ஏற்படுகிறது. அவர்களுக்குத் துரோகமாகவோ, மோசமாகவோ ஏமாற்றியோ நடக்கத் துணிந்துவிட்டபோது, தன்னுடைய பெரிய வாழ்வே அடியோடும் வீழ்ந்து சாய்ந்து நாசமாகிறது.

---

உலகில் ஏராளமான பணமிருந்தும் எவரிடமும் அது இல்லாமலிருக்கிறது. வருமானவரிக் கணக்கைப் பூர்த்தி செய்து அனுப்புவதைக்காட்டிலும் சிறை சென்றுவிடுவது மேல் என்கிறார் ஒரு பெரிய வியாபாரி.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# "ஹா! என் ஏழை தேசமே! என் ஏழை ஜனமே!"



கேட்கிறீர்களா என் துரைச்சிங்கங்களே! ரொம்ப ரொம்ப நாளைக்கு முந்தி, அதாவது முப்பத்து நாலு வருஷங்கட்கு முன்னே, 1899-ம் வருஷத்திலே, விக்டோரியா மஹாராணியாரின் காலத்திலே, தென்னாப்பிரிக்காவிலே போயர் யுத்தம் ஒன்று நடந்ததே! அது உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா? அந்த யுத்தத்திலே, ஜெனரல் ஜோபர்ட்டு என்பவர் போயர்களின் சேனாதிபதிகளில் ஒருவரா யிருந்தார். அவர் யுத்தத்தின் மத்தியிலேயே பிராணனை இழக்கும்படி நேரிட்டது. அவர் உயிரை விடுகிற தருணத்திலே தன்னுடைய நாட்டை நினைத்துக்கொண்டு "ஹா! என் ஏழை தேசமே; என் ஏழை ஜனமே!" என்று சொல்லிக்கொண்டே ஆவி பிரிந்தார். அந்த உருக்கமான வார்த்தையையே விகடனும் இப்போது சொல்லிக்கொண்டு உங்களின் முன்பு வந்து நமது தேசம் இருக்கிற போக்கை நினைத்து இரக்கப்படுகிறேன்! மொத்தத்துக்கு நமது தேசத்தைப்பார்த்தால், அல்ப சந்தோஷத்தில் மகிழ்ந்து போகிறதாகவும், அல்ப திருப்தியில் பூரித்துப் போவதாகவும், ஒருவேளைக் கறிக் குழம்பு, ஒரு தோசைத்துண்டு, மோர்க் குழம்பு வடை, ஒரு நாள் செய்த புலாவ் கிச்சடி விருந்து இவற்றிலே மகிழ்ந்து மயங்கிப் போவதாகவும், இப்படியே அற்ப சங்கதிகளுக் கெல்லாம் பெரும் சண்டையை வளர்த்துக்கொண்டு திரிவதாகவும், ஒரு சாதாரண அல்பமான திருத்தத்தைக்கூட ஏற்றுக் கொள்ளாமல் அதற்கு எத்தனையோ கட்சி பேதங்களை நீள ஏற்படுத்திக் கொள்வதாகவும், அற்பமான ஜாதிப் பெருமைகளையே அதிகமாகக் கவனித்து முக்கியமான சங்கதியை விட்டு விடுவதாகவும்—இப்படியே அற்ப சந்தோஷியாய், அற்பத்தனமான போக்காய், அற்பமான வாழ்க்கையிலேயே உழன்றுகொண்டு கிடப்பதை விகடனும் கண்டு, "ஹா! என் ஏழை தேசமே! என் ஏழை ஜனமே!" என்று ஆத்திரத்துடன் சொல்லிப் பரிதபிக்கிறேன்!

ஃ

நமக்குள்ளே எத்தனை ஜாதிச் சிறுமைகள், எத்தனை ஜாதிப் பிரிவினைகள், எத்தனை ஜாதிச் சண்டைகள், என் ஜாதி உயர்ந்தது—உன் ஜாதி தாழ்ந்தது என்கிற விவாதங்கள்! அதனாலே தேசத்துக்கு ஏதாவது நன்மை இருக்கிறதா? தென்னாட்டில் தான் வடகலே, தென்கலே குஸ்தி மேலுக்குமேல் எறிக்கொண்டு நிற்கிறதேயன்றி, கல்கத்தா, பம்பாய், பாஞ்சாலம், காசி இந்தப் பக்கங்களில் இந்தக் குழப்பமுமில்லே; இங்குள்ள ஆழ்வார் நாயன்மார்களையும் தெரியாது. இந்தச் சண்டையிலே எத்தனையோ பிரிவினைகள், பொறாமைகள், வியாஜ்யங்கள்! இப்படி உள்ளுக்குள் சண்டையிலேதில் புத்தி போகிறதே யன்றி, தேசப் பொது முன்னேற்றத்தில் கருத்து செல்லுகிறதா? எங்கள் சாமி, எங்கள் பெருமான் என்று கோயிற் பிராமணர்கள் தங்களுக்குள்ளாகவே சந்தனங்கள் பூசிக்கொண்டும், தீர்த்தங்கள் கொடுத்துக்கொண்டும், பொங்கல் வடைகளை நன்றாக மென்று விழுங்கிக்கொண்டும் குதூகலப் படுகிறார்களை தவிர, பக்கத்தில் சூழ்ந்துள்ள பெருங்கூட்டமான பிராமணரல்லாதார்க்கு ஒரு கரண்டி தீர்த்தம் கூட அந்த சமயத்திலே கொடுக்கிறதைக் காணோம்! இந்த ஒரு பிரிவினை தானா? இன்னும் எவ்வளவோ பிரிவினை! கோயிலுக்குள் இப்படிப் பிரிந்துக்கொண்டு, பிறகு வெளியே வந்ததும், வெகு நேசமாய் மார்போடு மார்பு ஒட்டத் தழுவிக்கொண்டு உறவாட வருவதும், ஒரு வேடிக்கையே யல்லவா?

ஃ

மகாத்மா காந்தியடிகள் ஹிந்து சாஸ்திரங்களை நம்பாதவரானதால் அவர் ஹிந்துவே யல்லவென்று ஒரு கனவான் கூறினார். சாஸ்திரங்களை நம்புவது போலவே நடித்துச் சாஸ்திர விரோதமாய் நடக்கிறவர்களும், நம்பிக்கைமட்டும் ஏதோவைத்து சாஸ்திரங்களின்படியே நடவாதவர்களும் ஹிந்துக்கள் போலிருக்கிறது! சாஸ்திரங்களின்படி நடவா விட்டாலும், அதை நம்பிக்கொண்டால் போதும் போலிருக்கிறது! சாஸ்திரப்படி விதவைக்குப் புனர் விவாகம் செய்யக் கூடாது. ஆனால், ரகசிய விபசாரம் செய்து கருவழித்தும், சிசுஹத்தி செய்தும் சாக்கடை யோரங்களில் எறியலாம் போலிருக்கிறது! இப்படிச் செய்கிறவர்கள் சாஸ்திரங்களை நம்புகிறவர்களென்றும், அவ்விதம் நம்புவதால் ஹிந்துக்களென்றும், சொல்லலாம் போலிருக்கிறது! இன்னொருவர் காந்தியடிகள் செத்துத் தொலைந்தாலும் தொலையட்டும், வர்ணாசிரம தர்மம் கெடக்கூடாது என்றார். இப்படிச் சொன்னவரை விட மஹாத்மா பெரியவரே யன்றித் தாழ்ந்தவரில்லே! இவ்வாறாக, மகாத்மாவை எவ்வளவு தூஷிக்க வேண்டுமோ அவ்வளவுக்கும் தூஷித்தாய் விட்டது! இதுதானா மஹாத்மாவின் உழைப்புக்குக் கிடைக்கிற கைம்மாறு என்று விகடன் சிந்திக்கிறேன்! ஹா! என் ஏழை தேசமே! என் ஏழை ஜனமே!

ஃ

சாஸ்திரங்களும், தர்மாசரணைகளும், வர்ணாசிரமங்களும் அதது இருக்கிறபடியே இருக்கட்டும்; அதற்குள்ளேயே பிரிவுக் கட்சிகளும், அதனால் தேசப் பொதுநன்மைக்குக் கேடும் உண்டாகாத வழியில் நடந்து கொண்டு போகக்கூடாதா? ஒரு சின்ன விஷயத்தைப் பிரமாதப் படுத்திக்கொண்டு—பெரிய விஷயமான தேச முன்னேற்றத்தை மறந்து—கக்ஷி பேதங்களைப் பெருகச் செய்து கொள்கிறோமே! ஐயோ! என்ன ஈனமான பிற்போக்கு! ஹரி

ஜனங்கள் இஸ்லாம் மதத்திலும், கிறிஸ்துவமதத்திலும் சேருவதானல் சேர்ந்து தொலேயட்டும், அதனல் ஹிந்து மதத்திற்குப் பாதகமில்லே யென்கிருர்கள்! ஹிந்து மதம் எழு கோடி ஜனங்களே இழந்து விட்டால் அதன் தொகையே குறைந்து கெட்டு மதிப்பற்றுப் போய்விடுகிறது! கண்டபடி பேசுகிறவர்கள் இதை நினேத்துப் பார்க்கிருர்களா? முக்கிய சங்கதி தேச முன்னேற்றமும், பிரி வினேயற்று யாவரும் ஒன்றுபட்டி ருக்க வேண்டியதுமேயாகும். அதைத் தான் முதலில் கவனிக்கவேண்டும். அதையே மகாத்மா முதலில் முக்கிய மானதாக நினேத்தவராய், ஹரி ஜனங்களுக்கு அதிக ஸ்தானங்கள் ஏற்படுத்தி ஸமரஸப் படுத்தினர். பிறகு பிரிவினேயில்லாமல் ஹரி ஜனங்களும் மற்ற ஹிந்துக்களும் ஒன்றுபட்டுப்போகும்படியும், அத ஞல் ஐக்கியபலமும், ஹரிஜனங்கள் சீர்திருந்தி உயர்ந்த நிலே யடைய வும் கூடும்படியாய் ஆலயப் பிர வேசக் கிளர்ச்சியைத் தொடங்கினர். இதில் கருத்தெல்லாம், சிந்தை யெல் லாம், தேசம் முன்னுக்கு வரவேண் டும், பிரிவினேப் பேதங்கள் ஒழிய வேண்டு மென்பதேயாகும். இந்த முக்கியமான விஷயத்திற்கு உழைக்க வந்த மஹாத்மாவைப் பழித்துத்தூஷி த்து அவர் ஹிந்துவே யல்லவென் றும், அவர் செத்துத் தொலேந்தாலும் தொலேயட்டு மென்றும் தூற்றுவது நியாயமாக இருக்கிறதா?—விசால ஹிருதயமாய்ப் பேசுவதாக இருக்கிற தா?–தேசப் பொதுநலத்தையும் ஐக் கிய பல விருத்தியையும் கோருவதாக இருக்கிறதா? ஐயோ! என் ஏழை தேசமே! என் ஏழை ஜனமே!

ஃ

இப்போது இராஜப்பிரதிநிதி யார் ஹரிஜனங்கள் ஆலயப் பிரவே சம் செய்வதற்கு மறுத்து விட்டதில் வைதீக வகுப்பார் தாங்கள் பெரிய வெற்றி பெற்று விட்டதாய்க் கொண் டாட்டமாயிருக்கிருர்கள். என்ன வெற்றியோ! என்ன சந்தோஷமோ! இப்படிச் சின்ன விஷயங்களில் திருப்தி பெற்றுப் போகிருர்களே தவிர, தேசப் பொதுநன்மையான, ஒரு ஸமூகத்தாரை உயர்த்திக் கௌரவிப்பதான பெரிய காரியத்தை நினேத்துப் பார்க்கிறவர்களாகக் காணுேமே! ஒரு விவாகத்தை நடக்க வொட்டாமல் தடுத்து அதற்கு வெற்றி கொண்டாடுவதைவிட, அந்த விவாகத்தை நடத்திவைத்துவிட்டு ஜெய பேரிகை கொட்டினல் அதல் லவா விசேஷித்த சாமர்த்தியமாகும். தங்கள் நாட்டுக்குள்ளேயே இருக்கிற ஹரிஜனங்களின் முன்னேற்றத்தில் கொஞ்சங்கூடக் கருணே இரக்கமே யில்லாமல், அவர்களுக்குக் கடவுளின் தரிசனத்தைக் கூடக் காட்ட மனமில் லாமல், வெளியிலே தூரத்தி ஈனப் படுத்தி அவமானம் செய்து விட்டு, அப்பால் தங்களுக்கு ஸ்வராஜ்யம் வேண்டுமென்றும், தங்களே ஆகாசத் துக்கு மேலே உயர்த்த வேண்டுமென் றும், அதிகமான சுதந்திரங்கள் கொடுக்கவேண்டுமென்றும் அரசாங் கத்தாரைக் கேட்டால், அதற்கு அர சாங்கத்தார் கை கொட்டிச் சிரிக்க மாட்டார்களா? உங்களுக்குள் இருக்

---

மருமகள் வீட்டிலிருப்பது பாரமாய்த் தோன்ருது. அவன் வீட்டுடன் ஒருத்தியாகச் சேர்ந்துபோனல், அது பாலில் சர்க்கரை சேர்ந்ததுபோலாம். ஆனல், மருமகனே வீட்டோடு வைத்துக்கொண்டு காலமுழுதும் அன்னமிட்டு ஸம்ரக்ஷணே செய்வதென்பது எவருக்கும் பெரிய பாரமே. அது விருத்தி முகத்தைக் காட்டுவதாகாது. ஏமாரிப் பெண்ணேக் கொடுத்தாகும்.

றெ ஒரு வகுப்பாருக்கே சுதந்திரங்கள் கொடுத்து ஒன்றுபட யோக்கியதையற்ற நீங்கள் தானு ஸ்வராஜ்யத்தைப் பெற்றுப் பாதுகாக்க சக்தியுள்ளவர்கள் என்று மூஞ்சியிலே இடித்துச் சொல்ல மாட்டார்களா? இதைச் சற்றேனும் சிந்தித்துப் பார்க்கக் காணுமே! ஹா! என் எழை தேசமே! என் எழை ஜனமே!

ஃ

போகட்டும்! ஹரிஜனங்கள் யாரையா? அவர்கள் எந்த ஊரையா? அவர்கள் எந்த ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியாவிலிருந்து வந்தவர்களய்யா? எல்லாம் இந்த இந்தியாவிலிருக்கிறவர்கள்தான். பழய மனுதர்ம சாஸ்திரத்திலே ஒரு பார்ப்பினிக்கும் ஒரு சூத்திரனுக்கும், பிறந்த சந்ததியார் என்று தானே சொல்லியிருக்கிறது! இவர்கள்தான் தீண்டாதவர்கள் என்று சொல்லப்படுகிறுர்களாம்! இப்போது ஒரு பிராமண ஸ்திரீக்கும் ஒரு சூத்திரனுக்கும் ஒரு குழந்தை பிறந்தால், அவன் ஆலயத்திற்குட் செல்வதை யார் தடுக்கிறுர்கள்! எத்தனையோ தாசி வேசிகள் எவ்வளவோ கலப்புச் சந்ததிகளை உற்பத்தியாக்கி யிருக்கிறுர்களே! எத்தனையோ ஹிந்து தாசி வேசிகள் அன்னிய மதஸ்தர்களுடனும் கலந்து குட்டி குழந்தைகள் பெற்று ஆபாஸ விருத்தி செய்திருக்கிறுர்களே! இவர்களெல்லாம் ஹிந்துக்களாகக் கருதப்பட்டுக் கோயிலுக்குள் செல்லலாமாம்! பழய பார்ப்பினி சூத்திர சந்ததிகள் மட்டும் போகக்கூடாதாம்! ஹா! சாஸ்திர வசனங்களுக்கு உபயோகிக்கப்படுகிற அர்த்தங்களும் அனுஷ்டிப்புகளுமே வெகு விநோதமாயிருக்கின்றதே; ஹா! என் எழை தேசமே! என் எழை ஜனமே!

ஃ

விகடன் ஹிந்து தர்மங்களேயோ, சாஸ்திரங்களேயோ, பூர்வாசாரங்களேயோ—யாவற்றிற்குமே விசேஷ பக்தி வைத்து வணங்கி நடக்கும் கர்ணுடகப் பழய மனுஷன்தான்! பழயனவற்றிற்கே விசேஷித்த மதிப்பு கொடுத்துக் கௌரவிப்பவன் தான்! புதிய மேனுட்டுச் சீர்திருத்த நாகரீகங்களை விரும்பாதவர்களில் விகடனும் ஒருவன்தான்! ஆனல், விகடனின் கவனிப்பெல்லாம், பிளவு பட்டுக் கிடப்பதும், ஒரு வகுப்பைத் தாழ்த்தி ஈனப்படுத்துவதும் கூடாதென்பதே. முக்கியமாய் தேச முன்னேற்றத்தையும், பிரிவினைகளைத் தொலைத்து ஐக்கியப்படுவதையும், தாழ்ந்த ஜாதியார்களுக்கு இரக்கம் காட்டுவதையுமே முதலில் கவனிக்க வேண்டுமென்பதே விகடன் சொல்ல வந்தது. தேச நன்மையைக் கவனிக்கவேண்டாம்!—ஒன்றுபடுவதைக் கவனிக்கவேண்டாம்!-தாழ்ந்த நிலையிலுள்ளவர்களைப்பற்றியும் சிந்திக்க வேண்டாம்!— கோயிலுக்குள்ளேயே குந்தி பூஜை மணியை ஆட்டிக்கொண்டிருந்தால் போதும்—என்று நினைக்கிறுர்களே! அடடா! இவ்வளவு தாழ்வான மனேபாவம் படைத்த ஜனங்களை வேறெந்த நாட்டிலுமே காண முடியாதய்யனே! ஓ! ஈசா! நீ எங்கு இருக்கிறுயோ! என்றைக்குத்தான் இவர்களுக்கு இரக்க சிந்தையைக் கொடுப்பாயோ! என்றுதான் இவர்களின் அறியாமையான பிடிவாத இருள் நீங்குமோ! ஹா! என் எழை தேசமே! என் எழை ஜனமே! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

---

"வாதத்தை நான் கேட்கமாட்டேனென்று ஒருவன் சொன்னுல், எனக்கு ஞானம் வேண்டாம்; நான் ஒன்றும் தெரிந்துகொள்ளமாட்டேன் என்று கூறுவதாகவே அர்த்தம்."—ஸ்ரீ. ஸி. இராஜகோபாலாச்சாரியார்.

# ரூ. 150 ரொக்கப் பரிசு.

போட்டியில் கலந்து கொள்பவ ரனைவருக்கும் (**Consolation Prize**) பரிசு உண்டு.

முதல் பரிசு ரூ. 50. 2-வது ரூ. 30. 3-வது ரூ. 15. 4-வது ரூ. 10. 5-வது ரூ. 10. 6-வது, 7-வது, 8-வது வரை ரூ. 5-வீதமும். 9-முதல் 18-வது வரை ரூ. 2 வீதம் புத்தகங்கள் கொடுக்கப்படும்.

நிபந்தனைகள் :—1. இதற்குப் பிரவேசக்கட்டணம் அணா 8 மணியார்டர் மூலமாய்த்தான் அனுப்பவேண்டும்.

2 (a) ஒன்றுக்கு மேற்பட்ட விடையனுப்புகிறவர்கள் முதல் பிரவேசக்கட்டணம் அணா 8-ம், அதற்குமேலனுப்பும் விடை ஒவ்வொன்றுக்கும் அணா 4 வீதம் சேர்த்தும் அனுப்பவேண்டும்.

(b) ஒரேதேதியில் ஒரே மொத்தமாக ரூ. 2-0-0 மணியார்டர் செய்து அன்றே ஒரே பெயரால் எத்தனை விடைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

3. கீழே குறிப்பிட்டிருக்கும் ஊர்களின் பெயர்களிலிருந்து கோடிட்ட இடங்களை பூர்த்தி செய்து சரியான விடையைக் கண்டு பிடிக்கவேண்டும். சரியான விடையை சென்னை "விநோதன்" பத்திரிகாசிரியரிடம் சீல் வைத்து ரிஜிஸ்தர் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அதுவே சரியான விடை. பங்குனி மாதத்திய "அமிர்த குணபோதினி"யில் சரியான விடையும் பரிசு பெற்றவர்களுடைய பெயரும் பிரசுரிக்கப்படும்.

4 (a) விடையை தபால் மூலமாகவும் பிரவேசக் கட்டணத்தை மணியார்டர் மூலமாயும் 5-3-33-க்குள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பவேண்டும். விடையை பேப்பரினும் தெளிவாக எழுதியனுப்பலாம்.

ஊர்களின் பெயர்.

| | | |
|---|---|---|
| இரங்கூன் | திருப்பரங்குன்றம் | 1. — — — — ர் |
| இராமேஸ்வரம் | திருவண்ணாமலை | 2. — — கை — ண்டா — |
| கரூர் | திருவனந்தபுரம் | 3. கொ — — — |
| கங்கைகொண்டான் | நாலாட்டின்புத்தூர் | 4. — — வ — — த— ரம் |
| கும்பகோணம் | நாட்டரசன் கோட்டை | 5. — ரா — — வரம் |
| கொல்லம் | பழனி | 6. — — — |
| கொழும்பு | பொள்ளாச்சி | 7. — ரு — —ர— கு — — ம் |
| சமயநல்லூர் | போத்தனூர் | 8. — ரு — ண் — ம — |
| சேலம் | போடிநாயக்கனூர் | 9. — — — நல்லூர் |
| தட்டப்பாறை | வீரவநல்லூர் | 10. — — — — ன் |

விலாசம் :—எம். எ. கிருஷ்ணஸ்வாமி பிள்ளை,
மானேஜர் "கிருஷ்ண அதிர்ஷ்ட போட்டி நிலையம்",
104, வடக்கு மாசி வீதி, மதுரை.

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ ஸ்ரீ லத்திய மாசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி-அ | 12 | 1 | ஞா | துவி-26-23, பூர-35-34, விஷ்ணுபதி, விருத்தியர்க்கம், சூன்யதிதி. |
| சி | 13 | 2 | திங் | திரி-23-23, உத்-34-5, திதிதுவயம். |
| சி | 14 | 3 | செ | சது-19-37, ஹஸ்-31-51, பஞ்சமிதிதி. |
| சி | 15 | (4-16) 4 | புத | பஞ்-15-16, சித்-29-7. |
| அ-சி | 16 | 5 | வியா | ஷஷ்-10-28, ஸ்வா-25-55, ஷஷ்டி அசுபம். |
| சி | 17 | 6 | வெ | ஸப்-5-19, உப-54-39, விசா-22-27, ஸீதா ஜனனம், அஷ்டகை. |
| சி | 18 | 7 | சனி | நவ-54-26, அநு-18-49, ராமதாஸ நவமி. |
| ம-அ | 19 | 8 | ஞா | தச-49-2, கேட்-15-7, மீனயனம் 2-55. |
| சி-உ | 20 | 9 | திங் | ஏகா-43-52, மூல-11-33, ஏகாதசி அசுபம். |
| சி-பி | 21 | 10 | செ | துவா-39-9, பூரா-8-15, திருவரங்கம் கருடன். |
| அ-சி | 22 | 11 | புத | திர-34-58, உரா-5-29, மஹா சிவராத்திரி. |
| சி | 23 | 12 | வியா | சசி-31-41, ப்ருவ-3-20. |
| சி | 24 | 13 | வெ | ● 29-24, அவி-2-10, துவாபர யுகாதி, திருவல்லிக்கேணி தெப்பம். |
| அ-ம | 25 | 14 | சனி | பிர-28-27, சத-2-10, பால்குணசுத்தம், ஜம்புகேசுரரதம். |
| சி-அ | 26 | 15 | ஞா | துவி-28-50, பூட்-3-29, கரிநாள் ஜில்காத்மீ 1௳ |
| சி | 27 | 16 | திங் | திரி-30-45, உட்-6-15, கரிநாள். |
| சி | 28 | 17 | செ | சது-34-7, ரே-10-31, கரிநாள், சாந்த சதுர்த்தி. |
| ம-சி | 1 | 18 | புத | பஞ்-38-44, அசு-15-57. |
| சி-ம | 2 | 19 | வியா | ஷஷ்-44-21, பர-22-29, ஷஷ்டி அசுபம். |
| சி-ம | மார்ச்சு 3 | 20 | வெ | ஸப்-50-26, கிரு-29-41. |
| அ-சி | 4 | 21 | சனி | அஷ்-56-33, ரோ-36-59. |
| சி | 5 | 22 | ஞா | நவ-60-0, மிரு-43-57. |
| சி-அ | 6 | 23 | திங் | நவ-2-8, ஆரு-49-59. |
| சி | 7 | 24 | செ | தச-6-30, புந-54-43, தசமி அசுபம். |
| சி | 8 | 25 | புத | ஏகா-9-25, பூச-57-48. |
| சி-அ | 9 | 26 | வியா | துவா-10-40, ஆயி-59-15, நரஸிம்ம துவாதசி. |
| ம-சி | 10 | 27 | வெ | திர-10-13, மக-59-5, திருவொற்றியூர் மகிழடி, மாசிமகம். |
| சி-உ | 11 | 28 | சனி | சசி-8-8, பூர-57-24, காமதஹனம், ஹோலி பண்டகை. |
| அ | 12 | 29 | ஞா | ○ 4-39, உப-55-20, உத்-54-37, வஸந்த உத்ஸவம், ராயஜீகுள தெப்பம். |
| சி-பி | 13 | 30 | திங் | துவி-54-19, அசு-50-49, துவிதியாதிதி, மீன ரவி 44-29, ஷடசிதி, விருத்தியர்க்கம். |

| | | | |
|---|---|---|---|
| புதன் | | | |
| ராகு ர-சுக் | 15௳-க்கு ராசி | | |
| சனி | | | குஜ குரு கேது |
| | | | |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1933.